8th April 1958] [Sri K. Anbazhagan]

என்று மௌலான ஆஸாத் அவர்கள், மறைந்த மிகப் பெருந்தகை அவர்கள், மிக நன்ருக வலியுறுத்தி எடுத்துச் சொல்லியிருக்கிருர். அந்த குறைகள் இந்த நாட்டு ஆசிரியர்களுடைய நிலேயிலே இருக்கிற வரையில், இந்த நாட்டு கல்வித் திட்டத்தின் பெயரை மாற்றுவதாலோ, ஒரு திட்டத்தை இன்னெரு திட்டமாக மாற்றுவதாலோ மாணவர்களுடைய எண்ணிக்கையை அதிகப்படுத்தி குடும்பத்திலுள்ள குழந்தைகளேக் காட்டிலும் ஆசிரியர் களுக்கு பள்ளிக்கூடத்திலுள்ள பிள்ளேகள் அதிகம் என்று எடுத்துக் காட்டுவதாலோ, எந்த விதத்திலும் கல்வித் திட்டமானது பயனுள்ளதாக மாறிவிடாது.

இந்த நேரத்தில் நான் மற்றென்று கூற விரும்புகிறேன். ஆசிரியர் களுக்கு இருக்கிற கஷ்ட நஷ்டங்களே தீர்ப்பதற்கு, தொழிலாளிகளுடைய கஷ்ட நஷ்டங்களே தீர்ப்பதற்கு காட்டிய அந்த அளவு கவனம்கூட பல நேரங்களிலே காட்டப்படவில்லே. தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம் இருக்கவேண்டுமென்று அரசாங்கம் நல்ல முறையிலே தீர்ப்பு அளிப்பதற்கு பல நேரங்களிலே முன் வருகிறது. ஆனல் அதே நேரத்திலே ஆசிரியர்களுடைய சம்பளத்திலே இருக்கிற குறையை உணர்ந்து, அவர் களுக்கு குறைந்தபட்ச அளவு சம்பளம் அளித்தாகவேண்டும் என்று இந்த அரசாங்கம் தீர்மானிக்க முடியவில்லே என்ருல், இந்த அரசாங்கம் முதலாளிகளேவிட கேவலமான நிலேமையில்தான் தன்னுடைய பொறுப்பை தட்டிக்கழிக்கிறது என்று குற்றம் சாட்ட விரும்புகிறேன். உள்ளாட்சி மன்றங் களால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களில் 30 ரூபாய் சம்பளம் வாங்க வேண்டிய நிலேமையில் ஆசிரியர்கள் இருக்கிருர்கள். ஒரு நாளேக்கு ஒரு ரூபாய் வீதம் அவர்கள் சம்பளம் வாங்குகிருர்கள். ஒரு ஆசிரியருக்கு திருமணம் ஆகியிருக்குமானல் அவர் மனேவியோடு சேர்ந்து ஒரு நாளேக்கு ஒரு ரூபாயில் குடும்பம் நடத்தியாகவேண்டும். அலவன்ஸையும் சேர்த்து அவர்கள் 45, 48, 50, ரூபாயில் அவர்கள் வாழ்க்கையை நடத்தியாக வேண்டும். வேறு விதத்தில், வருமானம் வருவதற்கு ஆரம்ப ஆசிரியர் களுக்கு வாய்ப்பு உண்டா என்று கேட்டால், வாய்ப்பு கிடையாது. அவர் கள் பார்க்கின்ற அந்த வேலே நிரந்தரமானதா என்று கேட்டால், நிரந்தரம் என்றுசொல்லமுடியாது. மூன்று மாத அறிவிப்பை அந்தந்த பள்ளிக்கூட நிர்வாகிகள் அந்த ஆசிரியர்களுக்கு தரமுடியும். மூன்று மாதங்களுக்கு மேல் வேலே நிச்சயம் என்று அவர்கள் கருதிக் கொண் டிருக்க முடியாது. வேலே நிச்சயம் இல்லாத தன்மை, "பிராவிடண்ட் பண்டு" அல்லது ஊதிய சேமிப்பு ஏற்றுக்கொள்ளப்படாத நிலேமை, குறைவான சம்பளத்தில் வேலே செய்யவேண்டிய நிலேமை, ஆகிய இடுக் கண்கள் நிறைந்த சூழ்நிலேக்கு இந்த நாட்டு ஆரம்ப ஆசிரியர்கள் ஆளாகி யிருக்கிருர்கள். அதை மாற்றியமைப்பது அரசாங்கத்தின் பொறுப்பு. ஏனென்ருல் சக்தியோடு போராட முடியாத சமுதாயம் ஆசிரியர்களுடைய சமுதாயம். அவர்களுக்கு சக்தியோடு போராடுவதற்கு ஏற்ற சூழ்நிலே இல்லே. அவர்கள் கூட்டமாக சேர்ந்து இருக்கமுடியாது. கூடிச் சேரு வதற்கான வசதியையும் அவர்கள் தேடிக் கொள்ளமுடியாது. ஊதியம் அதிகமாக உள்ளவர்கள் நாடு எங்கும் பரந்து இருப்பார்களேயானல் ஒன்று சேர்ந்து பல காரியங்களே செய்யமுடியும். ஊதியம் குறைவாக இருப்பவர் கள் ஒரே இடத்தில் குழுமியிருந்தால், அவர்கள் ஒன்று சேர்ந்து பல குறை களே எடுத்துச் சொல்லமுடியும். ஆனல் ஆசிரியர்கள் கிராமந்தோறும் பரவியிருப்பதால், ஒன்று சேருவது கடினம். அப்படி ஒன்று சேரமுடியாத நிலேயில் இருக்கும் அவர்கள் கஷ்டத்தை உணர்ந்து, உடனடியாக நம் முடைய ஆட்சியாளர்கள் அவர்களுடைய குறைகளேயெல்லாம் கவனித்து தீர்க்கவேண்டும்.

அதுமட்டுமல்ல. இன்றையதினம் ஒரு பள்ளியில் வேலே செய்பவர் களுக்கு ஒரு ஊதியம், தனிப்பட்ட நிர்வாகத்தில் நடைபெறும் பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கு ஊதியம் ஒரு விதம், உள்ளாட்சி மன்றங்களால் நடத் தப்படும் பள்ளிக்கூடங்களில் உள்ள ஆசிரியர்களுக்கு மற்றெரு வகையிலே சம்பளம், அரசாங்கத்தால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்களுக்கு வேறு விதமான சம்பளம் என்ற நிலேமை ஆரம்ப ஆசிரி யர்களுக்கு இன்றையதினம் இருந்துகொண்டு வருகிறது. உயர்நிலே ஆசிரி

யர்களைப் பொறுத்த வரையிலே ஒரே விகிதத்தை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது என்று சொன்னாலும் செகண்டரி கிரேட் டீச்சர்ஸ் நிலையிலும் கூட, 5-வது 4-வது வகுப்பிற்கு கீழ்பட்ட வகுப்புகளில் அந்த ஆசிரியர்கள் பாடம் நடத்துபவர்களாக இருப்பார்களேயானால், அவர்களுக்கு இன்றையதினம் அந்தச் சிறிது உயர்த்தப்பட்ட அந்தச் சம்பளம்கூட தரப்படுவதில்லை. அப்படி தரப்பட்டால்தான் அவர்கள் படித்த படிப்பிற்கு ஓரளவாவது பயன் பெற்றவர்களாக இருப்பார்கள். ஆசிரியர்களுடைய குறைந்தபட்ச சம்பளம் உடனடியாக தீர்மானிக்கப்படவேண்டும். யாரானாலும் வயிற்றைக் கழுவி, அதற்குப் பின்னால்தான் வாயைத் திறந்து பாடம் நடத்தமுடியும். வயிற்றிற்கு போதுமான உணவு இல்லாமல் அவர்கள் எந்தக் கடமையையும் செம்மையாகச் செய்யமுடியாது. நம்முடைய அமைச்சர்கள்கூட என்ன அருமையான சூழ்நிலையில் அமர்ந்திருந்தாலும், பசி வந்திட பத்தும் பரந்து போம் என்று கூறுவதுபோல பறந்துவிடா விட்டாலும்கூட, இங்கு அமர்ந்திருப்பதை விட்டுவிட்டு பசியைப் போக்கிக் கொள்ளுவதற்கு செல்லும் மனப்பான்மை இயற்கையாகவே இருக்கிறது. அது குறை அல்ல. அந்தப் பசியைப் போக்கிக் கொள்ளுவதற்கு நமக்கு இருக்கும் வாய்ப்பு ஆரம்ப ஆசிரியர்களுக்கு இருந்தாகவேண்டும். அதை விட பெரிய வாய்ப்பு இல்லாவிட்டாலும்கூட, அந்த அளவுக்கு வசதிகள் அவர்களுக்கு அளிக்கப்படவேண்டும். அதற்காக குறைந்தபட்சம் ரூ. 50 ஆரம்ப ஆசிரியர்களுக்கு சம்பளம் இருக்கவேண்டும். செகண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கு ரூ. 70 அளவு சம்பளம் அளிக்கப்பட்டால்தான், அவர்களுக்கு இந்த நாட்டிலே எஸ்.எஸ்.எல்.ஸி. படித்து அதற்கு மேல் இரண்டு ஆண்டு பயிற்சி பெற்றதற்குரிய ஒரு வாய்ப்பு கிடைத்ததாகும். அதற்கு மேல் எண்ணிப் பார்ப்போமானால், தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிக் கூடங்களில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகைப்படி அளிக்கப் படவில்லை. அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருக்கிற பள்ளிக்கூடங்களில் இருக்கும் ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகைப்படி தரப்படுகிறது. அதுபற்றி அவர்கள் திரும்ப திரும்ப கேட்டிருக்கிறார்கள். ஊதியம் குறைவாக இருந்து நகரங்களிலே வாழும் ஆசிரியர்களாக இருப்பார்களேயானால், அவர்களுக்கு அரசாங்கம்தான் முயற்சி செய்து வீட்டு வாடகைப் படியை தந்தாகவேண்டும். பிரசவகால விடுமுறை தொழிலாள பெண்மணிகளுக்கு எப்படி அளிக்கப்படுகிறதோ, புதிய சட்டங்களின் மூலம் எப்படி அளிக்கப் படுகிறதோ, அதே முறையில் ஆசிரியப் பெண்மணிகளுக்கும் அளிக்கப்பட வேண்டும். பிரசவம் என்பது ஆசிரியைக்கும் தொழிலாளப் பெண்மணி களுக்கும், இரண்டு பேர்களுக்கும் ஒரேவிதமான வேதனையைத்தான் தரும். அப்படிப்பட்ட நிலைமையில் உள்ளவர்களுக்கு சம நிலைமையில் வாய்ப்பு அளிக்கவேண்டும்.



அதற்கு அடுத்து, இந்த நாட்டிலே இருக்கிறவர்களுக்கு ஓர் ஆசிரியர் களாக ஒரு திட்டத்தின் கீழ் வேலை தரவேண்டுமென்று தீர்மானித்து, அந்த ஆசிரியர்களுக்கு ஒரு நீண்ட கால பயிற்சித் திட்டத்தை வலியுறுத்திவிட்டார்கள். முதலிலே குறைந்த காலப் பயிற்சி போதும் என்று கருதினார்கள். நிபுணர்கள் திரும்ப ஆராய்ந்தார்கள். ஆராய்ந்தவுடனே, இரண்டு ஆண்டு காலப் பயிற்சி தேவை என்று சொல்லி அந்த ஆசிரியர்களை பயிற்சிக்கு அனுப்பியிருக்கிறார்கள். பயிற்சியினுடைய நோக்கத்தை நான் ஆதரிக்கிறேன். ஆனால் நிலைமையைக்கண்டு அதற்கேற்ற முறையில் பயிற்சி ஏற்படுத்துவது நிபுணர்களின் வேலையாக இருக்கவேண்டும். அந்த முறையில் பார்க்கப்போனால் ஏறத்தாழ ஓராண்டு காலத்தில், 2, 3 ஆண்டு காலம் ஆசிரியராக இருந்தவர்களுக்கு நல்ல முறையிலே பயிற்சி அளிக்க முடியும். அது மட்டுமல்ல. அவர்களுக்கு அந்த நேரத்தில் தரப்பட்ட ஊதியத்தையும் உயர்த்தியிருக்கவேண்டும். ஆனால் அவர்கள் மிகக் குறைந்த ஊதியம் பெறுகிறார்கள். குறைந்த ஊதியம் பெறுவதனால் அவர்கள் படுகின்ற வேதனை அதிகம். பல முறை அவர்கள் விண்ணப்பித்துக்கொண்டிருந்தபோதிலும், முதலில் அமைச்சர் அவர்கள் கவனிப்பதாகச் சொல்லி, பிறகு கவனித்தோம், இப்பொழுது இயலாது என்று மறுப்பது மிகமிக வருந்தத்தக்கது.

8th April 1958] [Sri M. S. Selvarajan]

முடியும் என்று நினைக்கமுடியாது. அதையும் கடந்து கல்வியின் குறிக்கோள் இந்த நாட்டில், இந்த ராஜ்யத்தில், பின்பற்றக்கூடிய நிலைமை இருக்கவேண்டும் என்பது என்னுடைய ஆசை.

கல்லூரிகளில் சொற்பொழிவு முறையில் பயிற்றுவிக்கப்படுவதுகூட அடிப்படைக் கோளாறுக்குக் காரணமாக இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். பிரசங்க முறை (லெக்சர் முறை) பின்பற்றப்படுவதில் கோளாறு இருப்பதாக நான் அரிகிறேன். பிரசங்க முறைக்குப் பதிலாக "டிஸ்கஷன் முறை" அதாவது ஒருவருக்கொருவர் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளக்கூடிய முறையில் கல்வி பயிற்றுவிக்கக்கூடிய ஒரு பயிற்சி முறையைக்கூட நாம் ஏற்படுத்தலாம். இந்த நாட்டிலுள்ள குழந்தைகளும் சரி சாதாரண நடுத்தரப் பருவம் உள்ள சர்வகலாசாலை மாணவனாக இருந்தாலும் சரி, கல்வித்தரத்தில் உலகத்திலுள்ள எந்த தேசத்திற்கும் நம் தேசம் பின் தங்கியது அல்ல. அமெரிக்கா தேசம் போன்ற நாகரீக தேசத்திலே இருக்கும் மாணவனுக்குக்கூட நம் தேச மாணவன் பின்தங்கியவன் அல்ல. இந்த நாட்டிலிருந்து பிறதேசங்களுக்குச் செல்லும் ஆவரேஜ் மாணவர்கள், அங்கேயுள்ள மாணவர்களோடு பரீட்சை எழுதி முதல்தரமாகத் தேறக்கூடிய நிலையில் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது. இந்த நாட்டிலே இன்ஜினீரிங் கல்வி பெறுபவர்கள்கூட சாதாரண கிராமத்தில் இருக்கும் தச்சர், கொல்லர் போன்றவர்களிடம் தெரிந்துகொள்ளவேண்டிய அளவுக்குக்கூட கல்விபெறாமல் இருப்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அந்த அளவுக்கு இருக்குமானால், எங்கோ ஒரு திசையில் கோளாறு இருக்கிறது. சிலர் குறிப்பிட்டதுபோல், சர்வகலாசாலையிலும், மற்றும் சில பகுதிகளிலும் மாணவர்களுடைய ஒழுக்கம்கூட ஓரளவு கெட்டு இருக்குமானால், அது கல்வியில் இருக்கும் உன்னதமான லட்சியத்தை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்பதையும் இந்த நாட்டின் கல்வித்தரம் இன்னும் மாறவேண்டிய நிலைமையில் இருக்கிறது என்பதையும்தான் காட்டுகிறது.

நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். சர்வகலாசாலையில் போதனாமொழி ஆங்கிலமா, தமிழா என்று பல சர்ச்சைகள் இருந்துகொண்டிருப்பது அவ்வளவு அவசியம் இல்லை என்று நான் நினைக்கிறேன். இன்று இருக்கும் லெக்சர் முறை பின்பற்றப்படாமல், டிஸ்கஷன் முறை பின்பற்றப்படக்கூடிய நிலைமை வருமானால் ஒவ்வொரு மாணவனுடைய கருத்து சொந்த பாஷையில் தான் உருவாக முடியும். அந்தக் கருத்து ஆங்கிலம் மூலமாக மட்டும் அல்லாமல், ஆங்கிலம் தமிழ் ஆகிய இவ்விரண்டு மொழிகள் மூலமாகவும் இருந்து, தமிழ் மொழியே பின்னால் வந்து ஆட்சி புரியக்கூடிய நிலைமைக்கு வந்துவிடும். அந்த முறையில் கல்லூரிகளிலும் தமிழே போதனா மொழியாக அமையக்கூடிய நிலைமையை நாம் பெற்றுக் கொள்ள முடியும்.

செகண்டரி பயிற்சி, வெறுமனே தொழிலுக்கு மாத்திரம், உத்தியோகத்திற்கு மாத்திரம் பயிற்றுவிக்கக்கூடிய நிலைமை இல்லாமல் மாற்றம் செய்யப்படவேண்டும். பஞ்சாப் ராஜ்யத்தில் சிற்சில பகுதிகளில் சிற்சில முறைகள் பின்பற்றப்படுகின்றன. வருடாந்திரப் பரீட்சை இல்லாவிட்டாலும், மாதாந்திர, வாராந்திர பரீட்சை போன்று வைத்து ஒருசில பாடசாலைகளில் சில முறைகள் அங்கே கையாளப்படுகின்றன. அவரவர்களுடைய தேவைக்குத் தகுந்தபடி ஆசிரியர்களும் மாணவர்களும் தங்களுடைய அபிப்பிராயங்களை எல்லாவற்றையும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்வதன் மூலம், அப்படிப் பரிமாறிக்கொள்ளுவதின் மத்தியிலே பயிற்றுவிக்கக்கூடிய நிலைமையை நாம் அங்கே பார்க்கிறோம். அங்கேயிருக்கும் சர்வகலாசாலை இவ்விதமாக பரீட்சை இல்லாமல் பயிற்றுவித்தாலும்கூட, அது போன்று பரீட்சை இல்லாமல் படித்துத் தேறக்கூடியவர்களைக்கூட சர்வகலாசாலை அப்ரூவ் செய்யக்கூடிய நிலைமையை நாம் பார்க்கிறோம். இதுபோன்ற நிலைமையை இங்கும் சிலயிடங்களில் முயற்சி செய்யலாம் என்பதை நினைப்பூட்டுகிறேன். காலையிலிருந்து மாலை வரையிலும் பாடசாலையில் மாணவர்கள் தங்கி இருப்பதும், ஆசிரியர்கள் பயிற்றுவிப்பதும் என்ற நிலைமை இருக்கும்போது, இந்த ராஜ்யத்தில் 180-லிருந்து 200 நாட்கள் வேலை நாட்கள் இருப்பதால், அதைப்பற்றி

அபிப்பிராய பேதங்களும் எதிர்ப்புகளும் இருக்கக்கூடிய நிலைமைக்கு ஆசிரியர்கள் முற்படுகிறார்கள். முதலாளி-தொழிலாளி என்ற தொழிற்சங்க முறையில், ஆசிரியர்களை நடத்தாமல், இந்தத் தேசத்தின் முன்னேற்றத்திற்கும் அவர்களுக்கும் சம்பந்தம் உண்டு என்ற குறிக்கோளோடு, அவர்களும் முன்னுக்கு வரக்கூடிய நிலைமையை கல்வித்திட்டத்தின் மூலமாக அவர்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்க நாம் முற்படவேண்டும்.

ஆரம்பக் கல்வியிலும்கூட, இன்றையதினம் இருக்கும் உபாத்தியாயர்-மாணவர் ரேஷியோ 1 : 35 என்று இருப்பதில்கூட தவறு இல்லை, கோளாறு இல்லை. கேரளத்தில் பின்பற்றப்படுவதுபோல், ஆசிரியர்கட்கு அதிகப்படியும் மாணவர்கட்குக் குறை கல்வியுமளிக்கும் ஷிப்ட் முறை இங்கே பின்பற்றப்படாத நிலைமையில் உபாத்தியாயர்-மாணவர் ரேஷியோ 1 : 35 என்று இருப்பதில் தவறு இல்லாமல் இருக்கலாம். ஆனால், சிறு சிறு ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் மாணவர்களைப் பிரித்து வைத்து, க்ரூப் ஸிஸ்டம் வைத்து, அவர்களுக்கே பயிற்சி கொடுக்கக்கூடிய நிலைமையில் ஒன்றிரண்டு பாடசாலைகளில் பரீட்சார்த்தமாக ஏற்பாடு செய்யலாம். நல்ல முறையிலே அவர்கள் வளருவதற்கு, ஆராய்ச்சி செய்வதற்கான நிலைமையைக்கூட சிற்சில பாடசாலைகளில் கொடுத்து, அதற்குள்ள நிலைமையைப் பின்பற்ற முயற்சிக்கலாம். ஆசிரியர்களுடைய தரம், குறிப்பாக அடிப்படையில் உள்ள ஆசிரியர்களுடைய தரம், நல்ல விதத்தில் முன்னேறாத வரையில் நாம் லட்சியத்தை அடைய முடியாது போகலாம். மத்திய சர்க்கார் மனமுவந்து கொடுக்கும் மான்யத்தை வாங்கி உபயோகிப்பதற்கு சென்ற வருஷம் தவறியிருக்கிறோம் என்பது வருத்தத்திற்குரியது. வீடு கட்டுவதற்கு மத்திய சர்க்கார் அளித்த மான்யத்தை இந்த ராஜ்ய சர்க்கார் தகுந்தபடியாக பயன்படுத்த தவறிவிட்டது. வருஷக் கடைசியில் மத்திய சர்க்கார் மானியங்கள் கொடுக்கப்படுவதால் சிரமம் ஏற்பட்டு இந்த ராஜ்யத்தில் எல்லாப் பாடசாலைகளிலும் நல்ல முறையிலே பயன்படுத்த முடியாமல் போய்விடுகிறது. அரசாங்கத்தின் நிர்வாக அமைப்பில் ஜில்லாக் கல்வி அதிகாரி மட்டும் இருந்தால் போதும். மத்தியிலே டிவிஷனல் இன்ஸ்பெக்டர் இருப்பதால் காலதாமதம் அனுவசியமாக ஏற்படுகிறது, என்பதை பற்பல ரெப்ரசென்டேஷன் மூலமாக நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும் மாற்று ஸ்கேல் நிர்ணயிக்கும்போது ஆரம்ப ஆசிரியர்களுடைய ஸ்கேல் மாற்றியமைக்கப்படவில்லை. ஆரம்ப ஆசிரியர்களுக்கு 30 ரூபாயிலிருந்து ஸ்கேல் ஆரம்பிக்கப்படுகிறது. 33 ரூபாயுடன் முடிவடைகிறது. இது சாதாரணமாக ரயில்வே போர்ட்டருக்கு கொடுக்கக்கூடிய சம்பளம்கூட இல்லாத நிலைமையில் இருக்கிறது. இதைப் பரிசீலனை செய்ய வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். ஆரம்ப ஆசிரியர்களுடைய குழந்தைகளுக்கும் குடும்பங்களுக்கும் ஆஸ்பத்திரி வசதிகளும், சாதாரண மருத்துவ வசதிகளும் போதுமான அளவுக்கு நாம் செய்து கொடுக்க முயற்சிக்கவேண்டும். நகரப்புறங்களில் ஸ்தலஸ்தாபன அரசாங்கப் பள்ளி ஆசிரியர்கட்கு வழங்கப்படும் வீட்டு வாடகை அலவன்ஸ் உதவிபெறும் பள்ளி ஆசிரியர்கட்கும் வழங்கப்படவேண்டும்.

மாணவர்களிடையே கட்டுப்பாட்டை வளர்ப்பதற்கும், ஒற்றுமையை வளர்ப்பதற்கும், எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் பொதுவான கடவுள் வாழ்த்து காலையிலும் மாலையிலும் தேசீயவாழ்த்துபாடக்கூடிய முறை பின்பற்றப்பட வேண்டும் என்று கண்டிப்பான உத்தரவு பிறப்பிக்கப்படவேண்டும். அப்
10-10 a.m. பொழுதுதான் நாட்டில் தேசீய உணர்ச்சி மாணவர்களிடையே ஏற்படும் என்றும் நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இன்றையதினம் நம்முடைய ராஜ்யத்தில் பயன்பட்டுக்கொண்டிருக்கக்கூடிய கல்வித் திட்டமும் சரி, தேசத்தில் பயன்பட்டுக்கொண்டிருக்கக் கூடிய கல்வித் திட்டமும் சரி, கவர்ச்சியோடுகூடிய விருத்தி இல்லாமல் இருக்கிறதென்பதை நான் வருத்தத்தோடு கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆங்காங்கு இருக்கக் கூடிய ஜில்லா அமைப்பு எதிர்காலத்தில் மாறப்போகிறது. என்றென்றும் நிரந்தரமாக இப்படியே இருக்க முடியாது. இந்த நாட்டின் உதவியுடன்கூட, வெளி நாட்டின் சொந்த உதவியும் சேர்ந்து சில பகுதிகளை விருத்தியடைந்திருக்கின்றன. விருத்தியடைந்த பகுதிகளின் வளர்ச்சி, கவர்ச்சி குன்றாமல் கல்வித் திட்டம் அமைய வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

சமயத்தில் ஸ்டைபெண்ட் 18 ரூபாய் தான் கொடுக்கப் படுகிறது. புதிதாக ட்ரெயினிங்குக்கு செல்பவர்களின் நிலை வேறு. ஆகவே, இந்த ஸ்டைபண்ட்டை அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மூன்று வருஷங்கள் அவர்கள் வேலை பார்த்து விடுகிறார்கள். இந்த பேஸிக் ட்ரெயினிங் பயிற்சி இரண்டு வருடங்கள் என்று இருப்பது அதிகம்; இரண்டு வருடங்கள் வேண்டியதில்லை, ஒரு வருடமே போதுமானதாகும். அடுத்தபடியாக, பாலிடெக்னிக்ஸ். பாலிடெக்னிக்ஸ் ஜில்லாவிற்கு ஒன்றாவது ஏற்படுத்தி அதில் அதிகம் மாணவர்கள் படிக்க வசதி செய்து கொடுக்கப் பட வேண்டும். அப்பொழுதுதான் நம் நாட்டில் தொழில் கல்வி வளர்ச்சி அடைந்து நாட்டிற்கு பயன் அளிக்கும் நிலை ஏற்படும். இப்பொழுது ஜில்லாவிற்கு ஒன்று இல்லை. ஏதோ சில முக்கியமான இடங்களில் அவைகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. அதனால் நாம் அதிக பயனை எதிர்பார்க்க முடியாது. அடுத்தபடியாக, மெடிக்கல், இன்ஜினியரிங் காலேஜ்களில் அதிகம் மாணவர்கள் சேர்ந்து படிப்பதற்கு வசதியான முறையில் கூடுதல் ஸீட்கள் அவைகளில் ஒதுக்கி இன்னும் கூடுதல் மெடிக்கல் காலேஜ்களும், என்ஜினியரிங் காலேஜ்களும் நாம் ஏற்படுத்த வேண்டிய நிலையில் இருக்கிறோம். என்ஜினியரிங் லைனில் எப்பொழுது பார்த்தாலும் 250 போஸ்ட்கள் வேக்கன்டாயிருக்கின்றன. ஆகவே, அதிகம் என்ஜினீயரிங், மெடிக்கல் கிராஜுவேட்ஸ் நமக்கு கிடைக்கும் விதத்தில் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்வதோடு, கல்லூரிகளில் தமிழை பாட மொழியாக்க வேண்டிய முயற்சியையும் எடுத்துக் கொள்ளவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI M. P. PERIASAMI:** சேர்மென் அவர்களே, இந்த கல்வி மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல நான் முன் வந்துள்ளேன். முன்பு நம் மாகாணத்தில் ரொம்பக் குறைவாகத்தான் பள்ளிக்கூடங்கள் இருந்தன. ஆனால் நமது காங்கிரஸ் அரசாங்கம் வந்தவுடனேயே சின்னச் சின்ன கிராமங்களில் எல்லாம் 500 ஜனத்தொகையுள்ள எல்லாக் கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. அதோடுகூட அநேகமாக படித்து வேலையில்லாது இருக்கக் கூடியவர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டு வருகிறது. அப்படி வேலை கொடுக்கப் பட்டிருந்தபோதிலும் அவர்களுக்கு சம்பளம் குறைவு என்பது நம் எல்லோருக்கும் தெரியும். வேலை கொடுத்து விட்டோமே தவிர அவர்களுக்கு போதுமான சம்பளம் கொடுக்கப்படவில்லை. அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் சம்பளத்தை, அடிப்படைச் சம்பளம் 30 என்று இருப்பதை குறைந்தது 50 ரூபாய் என்றாவது வைத்தால்தான் அவர்களுக்கு நாம் ஒரு சிறு நன்மையாவது செய்தவர்களாவோம். அப்படியானால்தான் அந்த ஆசிரியர்களுக்கும் பள்ளிக்கூடங்களில் பாடம் சொல்லிக் கொடுக்க ஒரு உற்சாகம் இருக்கும், என்று தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்தபடியாக, ஓராசிரியர்கள் அநேகமாக எல்லாக் கிராமங்களிலும் போடப் பட்டிருக்கிறார்கள். அந்த ஓராசிரியர்கள், மூன்று நான்கு வருடங்களாக சொல்லிக் கொடுத்து வந்திருக்கிறவர்கள், எல்லோரும் இன்று ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளுக்கு பயிற்சிக்கு அனுப்ப ஒன்றாகத் திரட்டப்பட்டு வருகிறார்கள். அவர்கள், 60, 70 என்று சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தவர்கள் இப்பொழுது ஸ்டைபன்டைக் கொண்டு மாத்திரம் படித்து வருகிறார்கள். இவர்களுக்கும், தனிப்பட்ட முறையில் பயிற்சிப் பள்ளியில் படித்து வருகிறவர்களுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு. அங்கு, கல்யாணம் ஆகாத மாணவர்கள் படிக்கிறார்கள். அவர்களுக்கு என்றால் அது போதும். இந்த ஓராசிரியர்களாக மூன்று நான்கு வருடங்கள் இருந்து வேலை செய்து வந்த ஆசிரியர்களுக்கு கல்யாணம் ஆகி அவர்கள் இரண்டு மூன்று குழந்தைகளையும் விட்டு விட்டு பயிற்சிப் பள்ளிக்குச் சென்று விடுகிறார்கள். அவர்கள் இந்த 18 ரூபாயைக் கொண்டு எப்படி காலம் தள்ள முடியும்? 60, 70 என்று சம்பளம் வாங்கி வந்த ஆசிரியர்கள் எப்படி 18 ரூபாயைக் கொண்டு ஜீவனம் நடத்த முடியும்? அவர்களின் மனைவி மக்களின் நிலை என்ன வாகும்? அதோடு இந்த பேஸிக் ட்ரெயினிங் இரண்டு வருஷம் என்றிருப்பதை ஒரு வருஷமாகக் குறைத்து விட வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். இரண்டு வருஷம் அப்படி படித்து விட்டு ஒரு ஆறு மாதம் பேஸிக் எடியூக்கேஷன் பள்ளிகளில் சேரவேண்டியிருக்கிறது. சேலத்தில்

[Sri M. P. Periasami] [8th April 1958

மோகனூரில் கிட்டத்தட்ட 200 உபாத்தியாயர்கள் படித்து வருகிறார்கள். பேசிக் எடியூக்கேஷன் அங்கு கிடையாது. அதை உடனடியாக பேஸிக் ஸ்கூலாக மாற்றவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இல்லாவிட்டால் பேஸிக் ட்ரெயினிங்கை ஒரு வருஷமாக குறைத்து சொல்லிக் கொடுக்க வேண்டும். அடுத்தபடியாக மத்தியானச் சாப்பாடு. ஏழைப் பிள்ளைகள் எல்லோருக்கும் மத்தியான உணவு அளிக்கப்பட்டு வருகிறது. அது மிகவும் முக்கியமான விஷயமாகும். நமது முதன் மந்திரியவர்களின் திட்டப்படித்தான் இது ஏற்பாடு செய்யப்பட்டதாகத் தெரிகிறது. அவர்கள் பெரிய மனது வைத்து ஏழைப் பிள்ளைகளுக்கு மத்தியானச் சாப்பாடு கொடுக்க ஏற்பாடு செய்து, அதற்கு நம் கல்வி இலாகா உயர்தர அதிகாரியான டைரக்டர் அவர்கள் சில கிராமங்களைச் சுற்றிப் பார்த்து இது பற்றி பிரசாரம் செய்து பொது மக்களிடம் இதுபற்றி ஒரு நல்ல அபிப்பிராயத்தை ஏற்படுத்தியதோடு ஏழைப்பிள்ளைகளுக்கு இலவச மத்தியானச் சாப்பாடு கொடுக்க கிராமத்தார் பண உதவியும் செய்து வருகிறார்கள். அது போற்றத்தக்கதுதான். அதற்கு அரசாங்கமும் தக்க மான்யம் கொடுக்க வேண்டும். நாமக்கல் தாலுகாவில் கந்தம்பாளையம் என்ற ஊரில் ஏற்கெனவேயே ஒரு ஹையர் எலிமென்ட்டரி ஸ்கூல் இருந்தது. அதை ஒரு உயர்நிலைப் பள்ளியாக்க வேண்டுமென்று கட்டிடம் கட்டியாகி விட்டது. ஆனால் இப்பொழுது அது எந்தக் காரணம் கொண்டோ அங்கிருந்து மாற்றப் பட்டு விட்டது. கல்வியமைச்சர் அவர்கள் இந்த வருஷத்தில் அப்படி ஒரு உயர் நிலைப் பள்ளியை அங்கு ஏற்படுத்துவதாக கூறியிருக்கிறார். ஆகவே, எப்படியாவது, இந்த வருஷத்திலாவது கந்தம்பாளையத்தில் ஒரு உயர் நிலைப் பள்ளியை ஏற்படுத்த அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். சேலத்தில் ஒரு முனிசிபல் கல்லூரி மட்டும் இருக்கிறது. நாமக்கல் தாலுக்காவில் ஒரு கல்லூரி கட்ட போதுமான நிலங்கள் வாங்கி வைத்திருக்கிறார்கள். அதற்கு அரசாங்கம் தக்க மான்யம் கொடுத்து அதைத் தொடங்க வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு கூட, சேலம் டௌனில் ஒரு பெண் கல்லூரி திறப்பதற்காக ஒரு முயற்சி நடைபெற்று வருகிறது. அதையும் ஏற்பாடு செய்யவேண்டும். சேலம் ஜில்லாவில் கிட்டத்தட்ட இரண்டு மூன்று கல்லூரிகள் இருந்தால்தான் சேலம ஜில்லாவில் உள்ள மாணவர்கள் மற்ற ஊர்களுக்குப் போகாமல் அங்கிருந்து கொண்டே படிக்க முடியும். அதோடு, ஹரிஜனங்கள் படிப்பதற்காக கிராமங்களில் அநேகம் உயர்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அங்கு ஹரிஜனங்கள் மட்டுமல்லாமல் பாக்கி எந்த ஜாதியில் சேர்ந்தவர்களானாலும் சரி, ஏழைப்பிள்ளைகள் படிக்க வாய்ப்பு அளிக்கப் பட்டிருக்கிறது. நாமக்கல் தாலுகால் இரண்டு ஹைஸ்கூல்கள் இருந்தன. இப்பொழுது, நம் காங்கிரஸ் சர்க்கார் வந்தபிறகு, கிட்டத்தட்ட 10, 11 ஹைஸ்கூல்கள் அங்கு வந்து விட்டன. நமது அரசாங்கத்தைக் குறை கூறுகிறவர்கள் அதையெல்லாம் எண்ணிப்பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். சின்னச் சின்ன கிராமங்களில் எல்லாம் நம் அரசாங்கம் பள்ளிக்கூடங்கள் திறந்திருக்கிறது. அது குறித்து எல்லோரும் அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள். அடுத்தபடியாக, ஒரு உபாத்தியாயர் 50, 60 பிள்ளைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பதென்றால் அது மிகவும் கஷ்டமான காரியமாகும் என்று உபாத்தியாயர்கள் தங்களது குறைகளை சொல்கிறார்கள். உபாத்தியாயர்கள் எங்கு பார்த்தாலும் கான்பரன்ஸ் போட்டு தங்கள் குறைகளை எடுத்துக் கூறுகிறார்கள். அவைகளையெல்லாம் அரசாங்கம் உடனடியாக கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதேசமயத்தில் உபாத்தியாயர்களுக்கும் ஒரு வேண்டுகோள் விடுகிறேன். உபாத்தியாயர்கள் தங்களது குறைகளைத் தெரிவிக்க ஒன்றாகத் திரண்டு கூட்டங்கள் போடுவது அவசியமே. ஆனால் அவர்கள் சாத்வீகமான முறையில் தங்களது குறைகளை எடுத்துச் சொல்வார்களேயானால் அரசாங்கம் அவைகளை உடனடியாகக் கவனிக்கும். அதற்கு மாறாக, அரசாங்கத்திற்கு விரோதமாக நடந்தால் அரசாங்கத்திற்கு கஷ்டந்தான் ஏற்படும். ஆகவே, இவைகள் ஒன்றும் இல்லாமல் ஒன்றாகச் சேர்ந்து அரசாங்கத்தினிடம் கேட்க வேண்டும். அதற்கு அரசாங்கம் ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

8th April 1958] [Sri N. K. Palanisami]

வைத்து, அடிஷனல் உபாத்தியாயர்கள் போடவில்லை என்றால், இன்னும் ஸ்டேக்நேஷனும், வேஸ்டேஜும் அதிகமாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறிய வகுப்புகளிலே உள்ள மாணவர்களுடைய விஷயத்தில் அதிக கவனம் செலுத்தவேண்டும். மேல் வகுப்புகளிலே கொஞ்சம் கவனம் குறைவாயிருந்தால் கூட பரவாயில்லை. ஆனால் சிறிய மாணவர்களிலே சிலர் சீக்கிரமாகப் புரிந்துகொள்வார்கள், சிலருக்கு அவ்வளவு சீக்கிரமாகப் புரியாது. அதற்குத் தகுந்தமாதிரி தனித்தனி மாணவர்களின் தரத்தைப் பொறுத்து ஆசிரியர்கள் சொல்லிக் கொடுக்கவேண்டும். ஒரு வகுப்பில் 50 பிள்ளைகள் படிக்கவேண்டுமென்று சொன்னால், எப்படி தனிப்பட்ட அட்டென்ஷன் கொடுக்க முடியும் என்று கேட்கிறேன். இப்பொழுதே கல்வியின் தரம் குறைந்திருக்கிறது. இதனால் மேலும் குறைவதற்கான வாய்ப்பு ஏற்படும். 20 அல்லது 25 பிள்ளைகள் இருக்கக்கூடிய இடங்களிலே 40 அல்லது 50 பிள்ளைகளை அடைத்து வைக்க வேண்டிய நிலைமை ஏற்படும். அதிகப்படியான கட்டிடங்களைக் கட்டுவதற்கும் பண வசதி கிடையாது. ஆகவே இதையெல்லாம் கவனித்து, கல்வியின் தரத்தை உயர்த்துவதற்கு முயற்சிக்க வேண்டும். கீழ் வகுப்புக்களில் 30 பிள்ளைகள் என்று வைத்துக்கொள்ளலாம். மேல் வகுப்புகளில் வேண்டுமானால், 35 அல்லது 40 என்று வைத்துக் கொள்ளலாம். 40 பிள்ளைகள் ஆனவுடனே அதிகப்படியான உபாத்தியாயர்கள் போடவேண்டும். அம்மாதிரிச் செய்யாவிட்டால், நாம் ஏதோ பணம் செலவு செய்கிறோம் என்று இருக்குமே தவிர கல்வியின் தரம் உயராது. பையன்களும் முன்னேற்றம் அடையமாட்டார்கள்.

ஆசிரியர்களின் நிலைமை சாதாரண பியூன்களைவிட மோசமாக இருக்கிறது என்று பண்டித நேரு அவர்களே சொல்லியிருக்கிறார்கள். அது மட்டுமல்ல. ஸெகண்டரிப் பள்ளிகளிலே இனிமேல் 2,700 மணி நேரம் வேலைக்குப் பதிலாக 4,000 மணி நேரம் வேலை செய்யவேண்டும். 180 நாட்களுக்குப் பதிலாக 200 நாட்கள் வேலை செய்யவேண்டும். அதைத் தவிர, அதிகப்படியான பையன்களுக்கும் சொல்லிக் கொடுக்கவேண்டியிருக்கிறது. இதற்குப் பிறகு எல்லாம் கூட அவர்களுக்கு பழைய சம்பளமே தான் பெறவேண்டிய நிலைமை இருக்கிறது. சுதந்திரம் பெறுவதற்கு முந்தி என்ன சம்பளம் இருந்ததோ அதையே இன்னமும் பெற்றுக் கொண்டு வாழ்க்கையில் கஷ்டப்படுகிறார்கள். நாம் பேசுகின்ற "சோஷலிஸம்" காகிதத்தில்தான் இருக்கிறது. நாம் சோஷலிஸத்தைப் பற்றிப் பேசுகிறோம். யாருக்காகப் பேசுகிறோம் என்று தெரியவில்லை. சாதாரண ஒரு உபாத்தியாயருக்கு, ஒரே கிரேடிலுள்ளவருக்கு, ஸ்தல ஸ்தாபனப் பள்ளிக்கூடங்களிலே சேர்ந்தால் ஒருவிதச் சம்பளம், தனிப்பட்ட எய்டெட் பள்ளிகளில் சேர்ந்தால் வேறுவிதச் சம்பளம், இன்னும் ஹைஸ்கூல்களில் சேர்ந்தால் இன்னொரு சம்பளம் என்ற தராதரம் இருப்பது என்ன காரணத்தினாலேயோ என்று எனக்குத் தெரியவில்லை. சர்க்கார் ரிப்போர்ட்டில் இந்த தராதரத்தைக் குறைப்பதற்கான நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். எந்த அளவுக்கு நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரியவில்லை. ஜூன் மாதத்திலிருந்து இந்தப் புதுத் திட்டம் ஆரம்பமாகப் போகிறது. இதுவரை ஒன்றும் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவில்லை.

"ஸ்பெஷல் பே, ஸ்பெஷல் அலவன்ஸ்" என்று 12 ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். ஆசிரியர்கள் சம்பள உயர்வு கேட்டால் ஐந்து ரூபாய் கொடுத்திருக்கிறோமேயென்று சொல்லுகிறார்கள். அலவன்ஸ் கொடுங்கள் என்று கேட்டால், 7 ரூபாய் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். என் இது இரண்டையும் சேர்த்துச் சம்பளமாகக் கொடுக்கக் கூடாது என்று கேட்கிறேன். இந்த ஸ்பெஷல் அலவன்சும் சில இடங்களிலே கொடுக்கப்படுவதில்லை. வாணியம்பாடி ராமகிருஷ்ண ஹைஸ்கூலிலே அந்த அலவன்ஸ் கொடுக்கப்படவில்லை. திருப்பத்தூர் வெங்கடேஸ்வரா ஹைஸ்கூலில் இந்த அலவன்ஸ் கொடுக்கப்படவில்லை. கார்ப்பொரேஷன் பள்ளிகளில் ஆசிரியர்கள் லீவு எடுத்தால் பாதி அலவன்ஸ்தான் கொடுக்கப்படுகிறது.

[Sri N. K. Palanisami] [8th April 1958

ஏற்கெனவே கொடுத்த சிறிய உயர்வு கூட இந்த ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, பாட முறையில் மாற்றம் ஏற்படவேண்டும். இன்னும் "**Black hole tragedy of Calcutta**" வைப்பற்றி படிக்க வேண்டிய துர்ப் பாக்கியமான நிலையில் நமது மாணவர்கள் இருக்கிறார்கள். மேல் வகுப்பு களில் "நான்டிடெயில்டு" பாடத்தில் அந்நியர்களைப் பற்றி இன்னும் படிக்க வேண்டியிருக்கிறது. நம் நாட்டிலே டாகூர் போன்ற கவிஞர்கள் இருந் திருக்கிறார்கள். ஏன் அவர்களைப்பற்றிய பாடங்களை வைக்காமல், இன்னும் அந்நியர்களைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டும்? மாணவர்களுக்கு கேள்விகள் போடும்பொழுதுகூட "**yes**" அல்லது "நோ"-வா என்று கேட்கிறார்கள். எல்லாவற்றிற்கும் மாணவர்கள் "நோ" என்று போட்டு விட்டாலும் கூட பாதி "ரைட்டாகப்" போய்விடும். இம்மாதிரி "**gambling**" முறை என் இருக்கவேண்டுமென்று கேட்கிறேன். "ஸிட்டிஸன்ஷிப்" கிளா ஸிலே ஒன்றும் சொல்லிக் கொடுப்பது கிடையாது. அந்த பீரியடிலே மாணவர்களை வெளியே சுற்ற விடுகிறார்கள். அந்த முறையை மாற்றி சரியான பாட திட்டத்தை வகுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

ஆதாரக் கல்வியைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். அச்சிடப்பட்ட முதல் புத்தகம் இருக்கிறதா என்பதே சந்தேகம். ஆசிரியர் போர்டில் என்ன எழுதுகிறாரோ அதைத்தான் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிலைமை இருக்கிறது. 40 பையன்களும் அந்த முறை யிலே உள்ள கருவிகளையெல்லாம் உபயோகித்து தேர்ச்சி அடைகிறார்கள் என்று சொல்ல முடியாது. அடுத்தபடியாக "இண்டஸ்டிரியல் பயஸ்" என்றிருக்கிறது. உண்மையிலே அது நல்ல முறைதான். சில பள்ளிக் கூடங்களிலேதான் இதை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். எஞ்சினியரிங் கல்வியைப் போதிக்கக்கூடிய முறையில் எல்லாப் பள்ளிக் கூடங்களிலும் இந்த முறையைக் கொண்டு வந்தால் நலமாக இருக்கும். இப்பொழுது இருக்கக்கூடிய ஆதாரக் கல்வி எந்தவிதமான ஆதாரமும் இல்லாமல் இருக்கிறது. இன்னும் பரீட்சார்த்தத் திட்டமாகத்தான் இருக் கிறது. சாதாரணக் கல்வி என்றிருப்பதை "ஆதாரக் கல்வி" என்று போர்டிலே வேண்டுமானால் போட்டு மாற்றலாம். ஆனால் உண்மையிலே ஆதாரக்கல்விப் பள்ளிக்கூடங்களாக மாற்றுவதற்கான சந்தர்ப்பம் கிடை யாது.

கனம் அமைச்சர் அவர்கள் அண்ணாமலை பல்கலைக் கழகத்தைப் பற்றிப் பேசினார்கள். அங்கே நடந்த சம்பவத்தைப் பற்றி எல்லோரும் வருத்தப் படுகிறோம். 29-ம் தேதி வரையிலும் மாணவர்கள் கட்டுப்பாடாகவும், ஒழுங்காகவும் இருந்தார்கள் என்று மந்திரி அவர்களே சொல்லுகிறார்கள். பெண்கள் நாடகம் நடத்திக்கொண்டிருந்தபோதும் கூட கட்டுப்பாடாக இருந்திருக்கிறார்கள். திரும்பி வரக்கூடிய நேரத்தில் தான் தகராறு ஏற்பட்டது. ஒரு சிலருக்கு பெர்மிஷன் கொடுத்தார்கள். ஒரு சிலருக்கு பெர்மிஷன் கொடுக்கவில்லை. ஏன் ஒரு சிலருக்குப் பெர்மிஷன் கொடுக்க வில்லையென்பதுதான் கேள்வி. "உள்ளே விட மாட்டேன்" என்று அங்கேயுள்ள பியூன் சொல்லி ஒரு மாணவரின் சட்டையைப் பிடித்துக் கிழித்ததன் காரணமாக, மாணவர்கள் இம்மாதிரியான முறையில் நடந்து கொண்டார்கள். துணைவேந்தரிடம் சென்றார்கள். அவர் மறு நாள் காலையில் அவர்களை வரச்சொன்னார். மறுநாள் அங்கே சென்று அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது போலீசார் அவர்களைக் கைது செய்திருக் கிறார்கள். இந்த நிலைமை இன்று மட்டும் இருப்பதல்ல. அதற்கு முன்பே அங்கேயிருக்கிற வார்டன் பேரிலும், அதிகாரிகள் பேரிலும் இருக்கக்கூடிய அதிருப்தியான நிலைமைதான் இதற்குக் காரணம். ஆகவே இதை விசாரிப்பதற்கு சர்க்கார் ஒரு கமிஷனை நியமித்து யார் மீது குற்றம் என் பதைக் கண்டுபிடிக்கவேண்டும். பரீட்சைகள் எல்லாம் ஒத்திவைக்கப்பட் டிருக்கின்றன. எவ்வளவு பெரிய தப்பிதமாக இருந்தாலும் கல்லூரியைத் திறந்து மாணவர்கள் வரும்படியான நிலைமையை உண்டாக்கி, பரீட்சை களை நடத்தும்படியான நிலைமையை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

8th April 1958] [Sri A. Vedarathnam]

அங்கத்தினர்கள் நன்ருக உணர்வார்கள். காந்தியடிகளைத்தவிர யாராலும் இந்த கல்வித்திட்டத்தை மாற்றியிருக்க முடியாது. அது அவர்கள் செய்த ஒரு மகத்தான சேவையென்பதை மறக்க முடியாது.

இன்றைக்கு பழைய கல்வித்திட்டத்தில் படித்தவர்கள் என்ன ஆவது என்பதைப்பற்றி ஸ்ரீமான் சிந்தாமணி தேஷ்முக் கூறுகிருர்கள்—1.25 இலட்சம் பட்டாதாரிகள், டிக்கிரி ஹோல்டர்கள் வேலையின்றியிருக்கிருர்கள் என்று கூறுகிருர்கள். இந்த மாகாணத்திலோ எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்து வேலையில்லாமல் இருப்பவர்கள் 1.50 இலட்சம் பேர் இருக்கிருர்கள். இப்படி வேலை இல்லாதவர்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைபோன்ற கல்விசாலையை மாற்றி அமைத்தது ஒரு பெரிய மகத்தான சேவையாகும். காந்தியடிகள் அவர்களால் கொடுக்கப்பட்ட இந்த கல்வித்திட்டம் நிபுணர்களால் சரியான திட்டம் என்று ஏற்றுக்கொள்ளப்பட்டு அதை மத்திய சர்க்காரும் ஏற்றுக்கொண்டு நாட்டிலுள்ள அத்தனை மாகாண சர்க்கார்களும் இதுதான் எதிர்காலத்திற்கு ஏற்ற நல்ல திட்டம் என்று ஒப்புக்கொண்டு 10 ஆண்டுகளாக இத்திட்டம் அமுலில் இருந்து வருகிறது. இந்த நேரத்திலே சர்வகலாசாலை துணைவேந்தர் ஒருவர் மேல் சபையில் ஆதாரக்கல்வி என்ருல் என்ன, எனக்கு புரியவில்லை என்று சொன்னுர்கள் என்ருல் அதை என்னென்று சொல்வது என்று எனக்குப் புரியவில்லை.

இது பெரிய விந்தையாக இருக்கிறது என்றுதான் நான் கூறுவேன். 11–10 a.m.
என் அப்படிச் சொல்லுகிறேன் என்ருல் பத்து ஆண்டு காலமாக அது அமுலுக்கு வந்திருக்கிறது. அதுமட்டும் அல்ல, சர்வகலாசாலை கமிஷன் ஒன்று நம்முடைய சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டு அதுவும் ஒரு ரிப்போர்ட்டை சமர்ப்பித்திருக்கிறது. அதன் விலை 15 ரூபாய். அந்த சர்வ கலாசாலை கமிஷனில் அந்தத் துணை வேந்தர் ஒரு உருப்பினராக இருந்து அதில் இந்த ஆதாரக் கல்வியைப்பற்றி ஒரு சாப்டரும் எழுதியிருக்கிருர்கள்.

(கனம் சபாநாயகர் தலைமை.)

அந்த ரிப்போர்ட்டும் அவருடைய முன்னிலையிலேயே தயாரிக்கப்பட்டிருக்கிறது. செகண்டரி எடுகேஷன் கமிட்டி தலைவராக இருந்தும் ரிப்போர்ட்டை எழுதியிருக்கிருர். அப்படித் தலைவராக இருந்து ஆதாரக் கல்வியைப் பற்றி எழுதியிருக்கிருர். அப்படி இருந்தும் அவர் ஆதாரக்கல்வியைப்பற்றி ஒன்றும் புரியவில்லை என்று சொன்ஞல் அது விந்தையாகத்தான் இருக்கிறது. போஸ்ட் பேஸிக் பரீக்ஷை முடித்தவர்கள் கல்லூரிகளில் படிக்கச் செல்லக்கூடிய நிலையில் இருக்கிருர்கள். நந்தனுர் கடவுளை வணங்குவதற்கு எப்படி நந்தி முட்டுகட்டையாக இருந்தாரோ அப்படி இவர் இருக்கிருர். கல்வி விஷயத்தில் இப்படி இவர் முட்டுகட்டையாக இருந்தால் இந்த நாட்டின் எதிர்காலத்தில் சர்வகலாசாலை படிப்பு முழுமையும் எப்படி தமிழ் மயமாக்க முடியும்? இப்பொழுது கல்வி அமைச்சர் அவர்கள் எதிர் காலத்தில் சர்வகலாசாலை முழுவதும் தமிழ் போதன மொழியாக வரவேண்டும் என்று சிந்தித்துக்கொண்டிருக்கிருர்; அதற்கு எப்படி வழி காண முடியும்? அதற்கு வேண்டிய முயற்சிகளை அவர் எவ்வளவோ எடுத்துக்கொண்டு வருகிருர். அதற்கு நந்திபோல் இவர் குறுக்கே நிற்கிருர். இன்றைக்கு வர்தாவை எடுத்துக்கொண்டால் அங்கே சர்வகலாசாலையில் இந்தி போதன மொழியாக வந்துவிட்டது. நாக்பூரில் மராத்தி மீடியம் வந்துவிட்டது. ஐதராபாத்தில் உருது மீடியம் வந்துவிட்டது. இப்படி பல மாகாண சர்வகலாசாலைகளில் போதன மொழி தாய் மொழியில் வந்துக் கொண்டிருக்கும்போது நம்முடைய நாட்டில் இன்னும் வராமல் இருக்கிறது. அங்கிருந்து எவ்வளவோ பட்டதாரிகள் பட்டம் பெற்று வெளியே வருகிருர்கள். அதைப்போலவே எவ்வளவோ வளமை வாய்ந்த தமிழ் மொழியில் இன்னும் வராமல் இருக்கிருர்கள். அவர்கள் வந்திருக்கும்போது வளமை வாய்ந்த தமிழ் மொழியில் என் வரக்கூடாது? அப்படி வருவதற்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறது. அப்படி வராமல் இன்னும் இருப்பது விந்தையாக இருக்கிறது. அதற்குக் காரணம் நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. போஸ்ட் பேஸிக்

[Sri A. Vedarathnam] [8th April 1958

ஸ்கூல் இந்த மாகாணத்தில் சில இடங்களில் பரீட்சார்த்தமாக வந்திருக்கிறது. பி.டி. கல்லூரியை இப்பொழுது ஒரத்தநாட்டில் ஆரம்பித்திருக்கிறார்கள். அதைச் சிறந்த முறையில் நடத்தி அதிலிருந்து சிறந்த பட்டதாரிகளை தோற்றுவிக்கவேண்டும். இப்பொழுது பட்டதாரி ஆசிரியர்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. பல பி.டி. கல்லூரிகளில் போதிய மாணவர்கள் வராததற்கு போதிய சம்பளம் இல்லாமல் இருப்பது தான் காரணம். இப்படிப்பட்ட கல்லூரிகளுக்கு மாணவர்கள் அதிகமாக வராமல் இருப்பதற்கு இதுதான் காரணம். அவர்களுக்கு கவனக்குறைவு இருக்கிறது என்பது அல்ல. மற்ற பயிற்சி பள்ளிகளில் 40 ஸ்தானங்களுக்கு 400 அப்ளிகேஷன் வருகின்றன என்று சொல்லுகிறார்கள். சில இடங்களில் பி.டி. காலேஜில் போதிய மாணவர்கள் வராமல் பல ஸ்தாபனங்கள் காலியாக இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். வாஸ்தவத்தில் குறைகள் இருக்கத்தான் செய்கிறது. அதன் காரணத்தால்தான் அதிகப்படியான மாணவர்கள் வருவதில்லை. இதை கனம் மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு கொண்டுவந்து அதற்கு ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மானியத்தை முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, கல்வி மானிய கோரிக்கையின் மீது எழுப்பப்பட்ட வெட்டுப் பிரேரபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். அண்ணாமலை சர்வகலாசாலை செனட்டில் நான் ஒரு அங்கத்தினர் என்ற காரணத்தால் இந்தப் பிரச்னையைப்பற்றி ஒரு சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். அண்ணாமலை சர்வகாலசாலையில் அண்மையில் நடந்த குழப்பமான நிலைமைக்கு கனம் மந்திரி அவர்கள் பொறுப்புடையவராக இருந்தும் கூட அவர் ஓர் பரிகாரமும் காணாதபடி இங்கே வந்தது தவறு என்பதை இதே மன்றத்தில் சுட்டிக்காட்டி பேசியிருந்தேன். ஆனால் கனம் அமைச்சர் அவர்கள் அண்ணாமலை சர்வகலாசாலை குழப்ப நிலைமையை விளக்கி இந்த மன்றத்தில் ஒரு ஸ்டேட்மெண்டை கொடுக்கிறபோது எனக்கு பதில் அளித்துச் சொன்னார். மந்திரியாக இருக்கிற நான் சர்வகலாசாலை நிர்வாகத்தில் தலையிடுவதோ அல்லது அவர்கள் கேட்காது தானாகவே அப்படிச் செய்வது சரியல்ல என்றும், மாணவர்கள் கேட்டிருந்தாலாவது அந்தப் பிரச்னைக்கு பரிகாரம் தேடியிருப்பேன் என்றும் எனக்கு பதில் சொன்னார். ஆனால் அந்த பதிலிலேயே கடைசிப் பகுதியில் கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டதை நான் இங்கே நினைவூட்டி மறுபடியும் அதை ஒப்பிட்டுப்பார்க்கும்படியாக நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அண்ணாமலை சர்வகலாசாலை மாணவர்கள் கேட்டிருந்தால் நான் தலையிட்டு அந்தப் பிரச்னைக்கு ஒரு பரிகாரம் தேடி இருப்பேன் என்று சொன்ன கனம் அமைச்சர் அவர்கள் அப்படிக் கேட்டும் ஒன்றும் செய்ய வில்லை என்பதுதான் எங்களுடைய குற்றச்சாட்டு. 30-ம் தேதி இரவு கனம் அமைச்சர் அவர்கள் சென்னைக்குப் புறப்படுவதாக திட்டம் இருந்தது. அதன்படி கனம் அமைச்சர் அவர்கள் புறப்பட்டு வந்திருக்கிறார். அந்த இடத்தில் இஞ்சினியரிங் பகுதி மாணவர்கள் அவரை வழி மறித்து இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு காணாதபடி போகக்கூடாது என்று கேட்டுக்கொண்டு அவரைப்போக விடாமல் மறித்திருக்கிறார்கள். அதன் பிறகு கனம் மந்திரியும் ஊருக்குப் புறப்படாமல் திரும்பி இருக்கிறார். அந்த அளவுக்கு நிலைமை இருந்திருக்கும்போது கனம் மந்திரி அவர்கள் பிரச்னைக்கு ஒரு பரிகாரம் தேடித் தந்து விட்டு சென்னைக்கு வந்திருக்கலாம். அந்த மாதிரி கனம் மந்திரி அவர்கள் பரிகாரம் செய்யாதபடி கல்லூரியிலிருந்து புறப்பட்டு வந்து விட்டு கல்லூரியை மூடிவிடுங்கள் என்று சொல்லக்கூடிய நிலைமையில் இன்றைய தினம் நாட்டில் நிலைமை இருக்கிறது என்று சொன்னால், பொறுப்புள்ள கல்வி இலாகா மந்திரி அவர்கள் சொன்னால், பொறுப்புள்ள கல்வி இலாகா மந்திரி அவர்கள் அங்கே இருந்து கொண்டு கல்லூரியை மூடக்கூடிய நிலைமை வருகிறது என்று சொன்னால் அங்குள்ள யுனிவர்சிட்டி நிர்வாகஸ்தர்களுக்கு நிர்வாகத் திறமை குறைவாக இருக்கிறது என்று சொல்வது மாத்திரம் அல்ல கனம் மந்திரி அவர்களுக்கும் நிர்வாகத் திறமை குறைவாக இருக்கிறது என்றும் குற்றம் சாட்ட விரும்புகிறேன். சர்வகலாசாலைக்கும் தங்களுக்கும் சம்பந்தம்

இல்லை என்று சொல்லிவிட்டு, சம்பந்தம் இல்லாத அவர் இங்கே வந்து ஸ்டேட்மெண்ட் கொடுக்க வேண்டிய அவசியமே கிடையாது. ஆனால் அவர் இங்கு வந்து அவசரமாகவும் அவசியமாகவும் ஒரு ஸ்டேட்மெண்டைக் கொடுத்தார், என்று சொன்னால் இந்நாட்டில் நடக்கிற கல்வி சம்பந்த மான ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் கல்வி இலாகாவுக்கு நிச்சயமாக பொறுப்பு உண்டு. அதே மாதிரி கல்வி மந்திரிக்கும் பொறுப்பு உண்டு. அப்படிப்பட்ட பொறுப்பு இல்லை என்று அவர் பேசியதுப் தலையிடுவது தவருக முடியும் என்று மந்திரி அவர்கள் சொன்னதும் அவர் பிரச்னையில் புகுந்து சரியானபடி வேலை செய்யவில்லையே என்ற திறமைக் குறைவு வெளிப்பட்டுவிடுமோ என்று அப்படி அவர் பேசியிருக்கிறார் என்றே நான் நிச்சயமாக கருதுகிறேன். 29-ம் தேதி பெண் மாணவர்களின் ஆஸ்டலில் நடந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்ட போது மாணவர்கள் நல்ல முறையில் நடந்து கொண்டதாகவும் சென்னையில்கூட மாண்வர்கள் அப்படிப்பட்ட நல்ல முறையில் நடந்து கொள்வதில்லை என்றுகூட சொல்லியிருக்கிறார். ஆகவே அவர் பேசியதில் சென்னையிலுள்ள மாணவர்கள் ஒழுங்காக நடப்பது இல்லை என்றுகூட கற்பனை செய்து கொண்டு அந்த இடத்தில் பேசியிருக்கிறார்.

29-ம் தேதி இரவு அங்கே இருக்கிற வாயில்காப்பாளுக இருக்கக்கூடிய ஒரு ஆள் ஒரு மாணவனை அனுமதிக்காத காரணத்தால் மாணவர்கள் உள்ளே சென்றவுடன் அந்த வாயில்காப்போன் அந்த மாணவர்களை தாறுமாருகப் பேசி அவர்களுடைய சட்டையைப் பிடித்து இழுத்து அவமரி யாதை செய்திருக்கிறான். அதனுல்தான் அங்கு குழப்பம் ஏற்பட்டது. அதன் பிறகுதான் அவர்கள் வைஸ் சான்சலரைக் பார்க்க வந்திருக்கிறார்கள். ஆனால் கனம் மந்திரி அவர்கள் என்ன சொல்கிறார் என்றால் வாயல்காப் போன் பர்மிட் இல்லாவிட்டால் எப்படி உள்ளே விடுவான், அவன் தன் னுடைய வேலையைச் செய்திருக்கிருன் என்ற முறையில் கனம் மந்திரி அவர்கள் குறிப்பிட்டார். அதன்மேல் மாணவர்கள் தவருன முறையில் நடந்துகொண்டார்கள் என்றும் குறிப்பிட்டார். ஆனால் நான் கனம் மந்திரிக்கு என்ன சொல்லிக்கொள்ள விரும்புகிறேன் என்றால் மாணவர்கள் பர்மிட் இல்லாதபடி உள்ளே சென்றார்கள் என்றால் அவர்கள் பேரில் வாயில்காப்போன் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு அதைப்பற்றி வார்ட னிடத்தில் ரிப்போர்ட் பண்ண வேண்டியதுதானே. அதன் பிறகு வைஸ் சான்சலரிடம் ரிப்போர்ட் பண்ண வேண்டியதுதானே. அப்படி இல்லாமல் அவமரியாதையாகப் பேசி, தாறுமாருகப் திட்டி சட்டையைபிடித்து இழுக்க வேண்டிய அவசியம் என்ன என்று கேட்கிறேன். அந்த சமயத்தில் அவர்கள் வைஸ் சான்சலர் வீட்டிற்குப் போகாமல் எங்கே செல்வார்கள். தி.மு.க. கட்டடத்திற்கு வருவார்களா ? அவர்கள் வைஸ் சான்சலர் கட்டடத் திற்கு வந்திருக்கிறார்கள், அன்றிரவே. அப்படி அவரிடம் வந்து வாயில் காப்போன் அவமரியாதையாக நடந்துகொண்டிருக்கிறான் என்று சொல் வதற்குத்தான் அவர்கள் வந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் வந்த போது நல்ல முறையில் அதைப்பற்றி விசாரணைசெய்து மாணவர்களை இரண்டு திட்டு திட்டிவிட்டுப் போகச்சொல்லியிருந்தால் அந்த அளவில் அந்தப் பிரச்னை அந்த இரவே முடிந்திருக்கும். அதையெல்லாம் செய் யாதபடி மந்திரி வந்திருக்கிறார், அவருக்கு அவமரியாதை ஏற்படும் வகை யில் ஒன்றும் செய்ய வேண்டாம் என்று சொல்லி தங்களுடையக் கடமை யைச் செய்யாமல் தட்டிக்கழித்து விட்டதால்தான் அந்தக் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. வேறு தனிக் காரணம் அதற்குச் சொல்லவே முடியாது. மறு நாள் காலையில் வந்த மாணவர்களுக்கு வைஸ் சான்ஸலர் என்ன பதில் சொன்னார் ? ஏன் அவர் பொறுப்பை தட்டிக் கழித்து கலெக்டரிடம் ஒப்படைக்கவேண்டும் ? கலெக்டர் தான் வைஸ் சான்ஸலர், நான் வைஸ் சான்ஸலர் அல்ல என்ற நிலைமையில் கலெக்டரிடம் ஏன் பொறுப்பை ஒப்புடைக்கவேண்டும் ? கலெக்டரிடம் ஒப்படைக்கும்படி அம்மாதிரி நிலைமை என்ன மோசமாக இருந்தது ? பொறுப்பு உள்ளவர் ஏன் இம்மாதிரி கலெக்டரிடம் ஒப்படைக்கவேண்டும் ? கலெக்டராவது பொறுப்போடு நடந்து கொண்டாரா என்றால், அதுவுமில்லை. கலெக்டர் மாணவர்களுடைய குறை களை விசாரித்தார்களா என்றால் அதுவும் கிடையாது. கலெக்டர் அவர்கள்

11-20 a.m.

மாணவர்களுடைய குறையை கவனிக்காததாலும், மந்திரி அவர்கள் கவனிக்க மறுத்ததாலும், கடைசியில் ஏதோ குழப்பங்கள் நடந்திருக்கின்றன. அம்மாதிரி காலித்தனத்தை யாரும் ஆதரிக்கமாட்டார்கள். மாணவர்களுடைய இம்மாதிரியான எழுச்சி இன்று நேற்று ஏற்பட்டது அல்ல. இதற்குக் காரணம் காங்கிரஸ்தான். சுதந்திர இயக்கத்தின்போது பல மாணவர்கள் காங்கிரஸினால் இம்மாதிரி பாதையில் பழக்கப்பட்டார்கள். அந்த வாடைதான் இப்பொழுது வீசுகிறது. இம்மாதிரி குழப்பங்கள் ஏற்பட்ட பிறகாவது அங்கே இருந்த கல்வி மந்திரி, மந்திரி என்ற ஹோதாவில் இதைப் பற்றி விசாரிப்பது சர்வகலாசாலையில் தலையிடுவது போலாகும் என்று சொன்னாலும், அரசியல் வாதி, பொறுப்புள்ள காங்கிரஸ் வாதி என்ற முறையில், ஏன் அமைச்சர் அவர்கள் மாணவர்களுடைய குறைகளை விசாரித்திருக்கக்கூடாது ? அப்படியில்லாமல், யாருக்கும் தெரியாமல் 31-ம் தேதி இங்கே திரும்பி வந்துவிட்டார். அவருக்கு என்ன பொறுப்பு இருக்கிறது என்று எப்படி சொல்ல முடியும் ? அதுமட்டுமல்ல. அமைச்சர் அவர்கள் இங்கு வந்து வாசல்காப்பான் நேர்மையாக நடந்துகொண்டிருக்கும்போது அவன்மேல் எப்படி நடவடிக்கை எடுப்பது என்று சொன்னார்கள். வாசல்காப்பான் நேர்மையாக நடந்துகொண்டதாகவே இருக்கட்டும். பிரஸிடென்ஸி காலேஜில் ஒரு பேராசிரியரை ஸஸ்பெண்டு செய்துவைத்திருக்கிறார்கள் 15 நாட்களாக. அவர் செய்த தவறு என்ன ? ஒரு பெண் மாணவி செய்த தவறுக்காக ஒரு பேராசிரியர் ஸஸ்பெண்டு செய்யப்பட்டிருக்கிறார். ஆனால் அண்ணாமலை நகரத்தில் மாணவர் செய்த தவறுக்காக பள்ளிக்கூடத்தையே மூடியிருக்கிறார்கள்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தெரியாமல் பேசாதீர்கள்.

SRI A. V. P. ASAITHAMBI : தெரிந்துதான் சொல்லுகிறேன். சட்டமன்றத்தில் அமைச்சர் அவர்கள் பேசும்பொழுது அண்ணாமலை நகர சம்பவத்தைப் பற்றி குறிப்பிடும்பொழுது எந்தக் கட்சியைப் பற்றியும் பேசவில்லை. ஆனால் வெளியே வேலூரில் மந்திரி அவர்கள் பொறுப்பு இல்லாத தன்மையிலே இந்தக் கலவரத்திற்கு காரணம் திராவிட முன்னேற்றக் கழகம் தான், நெஞ்சில் கை வைத்துப் பார்த்தால் தெரியும் என்றெல்லாம் பேசியிருக்கிறார்கள். அம்மாதிரி இங்கே பேசுவதற்கு அமைச்சர் அவர்களுக்கு என்ன பயம் ? இங்கே ஒரு மாதிரி பேசி, வெளியே ஒரு மாதிரி பேசுவானேன் ? இது தான் அரசியல் நாணயமா என்று தங்கள் மூலமாக அமைச்சர் அவர்களை கேட்கிறேன். மந்திரிகள் இன்றைக்கு ஒன்று சொல்லுவது, பிறகு அதை மறுத்துவிடுவது, இங்கே ஒன்று பேசுவது, வெளியே மற்றொன்று பேசுவது என்ற நிலைமை ஏன் ? இந்தக் கலவரத்திற்கு காரணம் திராவிட முன்னேற்றக் கழகம் என்பதற்கு ஏதாவது காரணம் காட்டி நிரூபிக்க முடியுமா என்று அமைச்சர் அவர்களை கேட்கிறேன். இந்தக் கலவரத்திற்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. எங்களுக்கு கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும் மந்திரிகள் போல் தாராளமாக போய் பேசுவதற்கு அனுமதி கிடைப்பது கிடையாது. லயோலா காலேஜில் முதல் அமைச்சர் அரசியல் பற்றி பேசுகிறார். கிறிஸ்துவ கல்லூரியில் கல்வி அமைச்சர் அரசியல் பேசுகிறார். (குறுக்கீடு) இந்தி மொழி கமிஷனைப் பற்றி பேசியிருக்கிறார். நாங்கள் அம்மாதிரி போய் பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைப்பதில்லை. இலக்கியத்தைப் பற்றி வேண்டுமானால் நாங்கள் பேசலாம். வேறு எதையும் பற்றி நாங்கள் பேசியதில்லை. கல்வி விஷயத்திலே, மாணவர்கள் விஷயத்திலே அமைச்சர் அவர்கள் தவறான பாதையில் செல்லுகிறார். மந்திரி பக்தவத்சலம் அவர்கள் மாணவர்கள் மிருகத்தனமாக நடந்துகொண்டார்கள் என்று பேசியிருக்கிறார். இது பொறுப்புள்ள ஒருவரின் பேச்சா என்று கேட்கிறேன். நம்முடைய பிள்ளைகளும் படிக்கிறார்கள். மந்திரி பக்தவத்சலம் அவர்களுடைய பிள்ளைகளும் படிக்கலாம். அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களுடைய பிள்ளைகளும் படிக்கலாம். எல்லோரையும் சேர்த்து மாணவர்கள் மிருகத்தனமாக நடக்கிறார்கள் என்று பொறுப்புள்ள மந்திரி பேசுவது என்றால் ..........(மணி அடிக்கப்பட்டது).

### III.—ANNOUNCEMNTS BY THE HON. THE SPEAKER—*cont.*

#### (2) COMMITTEE ON ESTIMATES.

MR. SPEAKER : I have to announce to the House that I have received 38 nominations to the Committee on Estimates, of which 24 nominations have since been withdrawn. As the number of candidates nominated and who have not withdrawn, is equal to the number of vacancies to be filled, viz., fourteen, I declare them to have been duly elected to the Committee on Estimates. The following are the fourteen candidates :—

1. Sri K. Appavoo Pillai.
2. Sri T. S. Ramaswamy Pillai.
3. Sri S. Pakkirisami Pillai.
4. Sri K. Sattanatha Karayalar.
5. Sri A. Govindasamy.
6. Sri A. P. C. Veerabahu.
7. Sri N. R. Thiagarajan.
8. Sri R. Subramaniam.
9. Sri C. R. Ramaswami.
10. Sri K. R. Viswanathan.
11. Sri K. S. Subramania Gounder.
12. Sri V. Govindaswami Naidu.
13. Sri T. Sivagnanam Pillai.
14. Sri A. E. Chandrasekharan.

The Hon. Minister for Finance is a Member of the Committee, ex-officio.

Under Rule 164 of the Assembly Rules, I nominate Sri K. S. Subramania Gounder to be the Chairman of the Committee.

#### (3) COMMITTEE ON PUBLIC ACCOUNTS.

MR. SPEAKER : I have to announce to the House that thirty-five members filed their nominations for the election of fourteen members to the Committee on Public Accounts. Twenty members have withdrawn their candidature.

As the number of candidates who have been duly nominated and have not withdrawn their candidature, exceeds the number of seats to be filled, there will be a poll in the Lounge Room for Members, Legislature Buildings, between the hours of 9 a.m. and 1 p.m. on Thursday, the 10th April 1958.

### VI.—BUDGET FOR THE YEAR 1958–59—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958–59—*cont.*

#### DEMAND XV—EDUCATION—*cont.*

SRI V. S. ARUNACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, இன்று கல்வி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யக் கோரிக்கையை முழுமனதோடு ஆதரித்து, என்னுடைய சில வார்த்தைகளை சொல்ல ஆசைப் படுகிறேன். நம்முடைய நாட்டிலே உள்ள எல்லா மக்களுக்கும் கல்வித் துறை தான் முக்கியம் என்பது நாம் எல்லோரும் அறிந்த விஷயமாகும். கல்வியை எந்த முறையில் நம் மக்களிடையே பறப்பவேண்டும், எந்த

[Sri V. S. Arunachalam] [8th April 1958

முறையிலே பறப்பினுல் மக்கள் பலன் அடைவார்கள் என்றெல்லாம் நாம் யோசிக்கவேண்டியது அவசியம். பல அங்கத்தினர்கள் அவர்களுடைய கருத்துகளை எடுத்து உரைத்தார்கள். நானும் சில கருத்துகளை சொல்ல ஆசைப்படுகிறேன்.

ஆரம்ப பள்ளிக்கூடங்களை நாம் முதலில் எடுத்துக்கொள்ளவேண்டும். ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நல்ல சிறந்த முறையிலே நடந்தால்தான், கல்வியானது நம்முடைய நாட்டிலே நல்ல முறையில் பெருக்கம் அடையும். ஆரம்ப ஆசிரியர்களுக்கு நல்ல ஊதியத்தை கொடுக்க நாம் வழி வகுக்க வேண்டும். இப்பொழுது நம் அரசாங்கமானது ஆரம்ப ஆசிரியர்களின் ஊதியத்தில் கவனம் செலுத்தி அதை ஓரளவுக்கு உயர்த்தியிருப்பதை நாம் வரவேற்கிறோம். இன்னும் அவர்களுடைய ஊதியத்தை தகுந்த முறையிலே உயர்த்தவேண்டுமென்று அரசாங்கத்தை இந்த சர்ந்தர்ப்பத் திலே நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, ஆரம்ப ஆசிரியர்கள் பணி செய்யும் வகைகளிலே நாம் நல்ல ஒரு திட்டத்தை நிறுவவேண்டும். இதற்கு முன்பு மாணவர்களின் எண்ணிக்கையை பற்றி நாம் திட்டமிட்டு கொடுத்துள்ளோம். 25 மாணவர் களுக்கு ஒரு ஆசிரியர் என்ற ஒரு கணக்கில் ஆரம்ப ஆசிரியர்கள் வேலை செய்து கொண்டு வந்தார்கள். தற்போது 40 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற ஒரு திட்டம் வந்துவிட்டது. அதனுல் அவர்கள் பல கஷ்டங் களுக்கு ஆளாகக்கூடும். எவ்வளவு திறமைசாலியாக ஒரு ஆசிரியர் இருந் தாலும் கூட, பிள்ளைகளின் எண்ணிக்கை அதிகமாக இருந்தால், பிள்ளை களுக்கு போதிக்கும் தன்மையிலே குறைவு ஏற்படும் என்பதுதான் என் னுடைய மனத் திட்டம். ஒரு கிராமத்திலுள்ள ஆரம்பப் பள்ளியில் 40 பிள்ளைகள் இருப்பார்கள். அதிலே 5 வகுப்புகள் இருக்கின்றன. அந்தப் பள்ளியில் ஒரே ஆசிரியர் இருந்தால், 5 வகுப்புகளுக்கும் ஒரே ஆசிரியர் பாடம் சொல்லுவது மிக கஷ்டம் என்றுதான் எனக்கு தெரிகிறது. அப் படியில்லாமல் 25 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் வீதம் இருந்தால், 40 பிள்ளைகள் இருக்கும்பொழுது 2 ஆசிரியர்கள் இருந்தால்தான், அந்தப் பள்ளி யிலே செவ்வனே அவர்கள் பாடத்தை மாணவர்களுக்கு போதிக்கக் கூடும். 20 அல்லது 25-க்கு அதிகப்பட்ட மாணவர்கள் இருந்தால் இன்னும் ஒரு ஆசிரியர் நியமித்து, ஆசிரியரின் எண்ணிக்கையை உயர்த்தவேண்டும் என்று நான் அரசாங்கத்தை இந்த சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்ளு கிறேன். ஆரம்ப ஆசிரியர்கள்தான் நம்முடைய நாட்டின் முதுகெலும்பு என்று நாம் சொல்லக்கூடும். அவர்கள் மாணவர்களை திருத்தி நல்ல படிப்பினையை அவர்களுக்கு போதிக்க அவர்களுக்கு தகுந்த உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அரசாங்கம் கொடுக்கவேண்டும். எல்லா ஆசிரியர்களும் அவர்களுடைய பணியை சரிவர ஆற்ற வேண்டுமானுல், பல்வேறு பள்ளிகளில் இருக்கும் ஆசிரியர்களின் சம்பளங்களில் ஏற்றத்தாழ்வு இருக்கக் கூடாது. ஒரே தரமுடைய ஆசிரியர்களின் சம்பள விகிதங்கள், ஜில்லா போர்டு பள்ளி களில் ஒரு விதமாகவும், கார்ப்பொரேஷன் பள்ளிகளில் ஒரு விதமாகவும், தனியார் பள்ளிகளில் இன்னொரு விதமாகவும் இருக்கின்றன. ஒரே தர முடைய ஆசிரியர்கள் எல்லோருடைய சம்பளங்களையும் ஒரே விகிதத்தில் அமைக்க வேண்டும். அதற்கான நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

நம் நாட்டின் மொத்த வருவாயில் 20 சதவிகிதத்தை அரசாங்கம் கல்விக்காகச் செலவிடுவதைப் போற்றுகிறோம். இவ்வளவு பணத்தை கல்விக்காகச் செலவழிக்கும்போது, கல்வித் திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்ற வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சில பள்ளிகளில் நல்ல கட்டிடங்கள் இல்லை. நல்ல கட்டிடங்கள் இல்லாத பல பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். அவைகளில் மாணவர்கள் அதிகமாக இருந்தாலும் கட்டிட வசதி குறைவாக இருப்பதால் ஒரு ஆசிரியரோ இரண்டு ஆசிரியர் களோகூட அவர்களுக்குப் சரிவரப் பாடம் சொல்லிக்கொடுக்க முடிய வில்லை. இப்போது அரசாங்கத்தார் பள்ளிக்கூடங்களுக்கு எவ்வளவோ

8th April 1958] [Sri V. Sankaran]

காலம் குறைவாக இருந்தாலும் அதனல் பாதகம் இல்லை என்றும் ஆரம்பக் கல்விக் கமிட்டியாரே சொல்லியிருக்கிருர்கள். ஆகவே, இந்தத் திட்டத்தை மறுபடியும் சட்டசபையின் பரிசீலனைக்குக் கொண்டு வந்து, அது சம்பந்தமாக சபை அங்கத்தினர்களின் கருத்துக்களை அறிந்தால் நன்ருக இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

அதிகச் செலவு இல்லாமல், லோகல் போர்டு பள்ளிகளில் 35 பையன் களுக்கு ஒரு உபாத்தியாயர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. உதவிபெறும் பாடசாலைகளில் ஒரு உபாத்தியாயருக்கு 20 பையன்கள் முதல் 60 பையன் கள் வரையில் இருக்கலாம் என்று இரட்டிப்பாக்கும்போது, செலவு இல்லா மலேயே பூரணமாக, எல்லோரும் கல்வி பெறும்படியாகச் செய்யலாம். அந்த ஒரு நிலைமையிலே அதைப் பழையபடி பரிசீலிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

நம் நாட்டில் ஓராசிரியர் உபாத்தியாயர்களைப் பொறுத்தவரையில், பயிற்சி பெற்றவர்களையெல்லாம் திரும்ப எடுத்துக்கொள்வதாக மந்திரி அவர்கள் வாக்குறுதி அளித்தார்கள். எஸ்.எஸ்.எல்.ஸி. படித்தவர்கள் ஙிடையர் ஆனபிறகும் இரண்டு மூன்று வருஷம் உபாத்தியாயர்களாக இருந்தவர்கள். அவர்கள் ஏற்கெனவே பயிற்சி பெற்றவர்களாக இருப்ப தால், அவர்களுடைய ஓய்வு பெறும் காலத்தை சிறிது உயர்த்தலாகாதா என்பதை மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்கள் யோசிக்க வேண்டுகிறேன்.

ஆரம்பப் பள்ளிகளையெல்லாம் ஆதாரப் பள்ளிகளாக மாற்றுவது சர்க் காருடைய உத்தேசம் என்று சொல்லப்படுகிறது. மூன்று முக்கிய அம் சங்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனல், பெரிய மாறுதலாக இருப்ப தால், ஆதாரப் பள்ளிகளாக மாற்றுவதனல் எப்படிப்பட்ட அனுகூலங்கள் எவ்வாறு கிடைக்கும், எப்படிப்பட்ட நன்மைகள் கிடைக்கும் என்பதை சற்று விவரமாகக் கூறுமாறு மதிப்பிற்குரிய அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

மத்தியானச் சாப்பாடு மாணவர்களுக்குப் போடும் விஷயமாகக் கூற வேண்டுமானல், மாணவன் ஒன்றுக்கு ஒன்றரையணு மதிப்புள்ள சாப்பாடு போடப்படும் என்று சொல்லப்படுகிறது. இந்த ஒன்றரையணுவுக்குள் மத்தி யான சாப்பாடு போட்டுவிட முடியுமா என்று தெரிந்துகொள்ள விரும்பு கிறேன். கிராமப் பள்ளிக்கூடங்களில் இந்த மத்தியானச் சாப்பாடு போடு வது என்பது பெரிய விழா மாதிரி நடக்கிறது. பள்ளிக்கூட உபாத்தியாயர் கள் அந்தந்த ஊரில் உள்ளவர்களிடமிருந்து நெல் வசூலிப்பதும், அதைச் சேகரித்து, பிறகு மாணவர்களுக்கு சாப்பாடு போடுவதைக் கவனிப்பதும், இப்படியாக உபாத்தியாயர்களுடைய காலத்தை விரயம் செய்கிருர்கள். இதற்கே முக்கியமாக காலம் போகிறது. கிராமத்திலுள்ள தனவந்தர் களிடமிருந்து நெல், அரிசி முதலியவைகளை வசூல் செய்வதினல், படிப்புச் சொல்லிக் கொடுப்பதைவிட, இதிலேயே அவர்களுடைய காலம் சென்று விடுகிறது என்று குறையும் இருக்கிறது. இதற்கு ஒரு நிரந்தரமான ஏற்பாடு செய்யவேண்டும். நிரந்தரமாக யராவது எண்டௌமென்ட் செய்ய முன்வந்தால், அவர்கள் இப்பணியை எடுத்துக்கொள்வது நல்லது. அப் போதைக்கப்போது அரிசியும் நெல்லும் வாங்கி, சமைத்துப் போடுவது என்றல் இந்தப் பிரச்னை என்றைக்கும் தீராத பிரச்னையாக இருந்து கொண்டிருக்கும். ஆகவே, இதற்கு ஒரு நிரந்தரமான ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

பைலட் ப்ராஜெக்ட் என்று திருவள்ளூரிலும், கடம்பத்தூரிலும் ரூ. 1,300-ம், ரூ. 12,500-ம் முறையே வசூல் செய்யப்பட்டதாகச் சொன் ஞர்கள். அந்த முறையிலே பல இடங்களில் பொது மக்களையும், உபாத்தி யாயர்களையும் சேர்த்து வைத்து, ஊரிலுள்ள பிரமுகர்களிடமிருந்து எண் டௌமென்ட் வாங்கி பள்ளிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய முற் படவேண்டும். அப்படி என்டௌமென்ட் செய்யக் கூடியவர்களுக்கு திருப்தியளிக்கக்கூடிய முறையில் பள்ளிக்கூடங்களில் அவர்களுடைய பெயர் கள் பொறித்த ஸ்லாப் வைக்கலாம். அதனல் அவர்களுக்கு ஊக்கம் ஏற்படலாம். ஆகவே, நிரந்தரமான எண்டௌமென்ட் இருக்கவேண்டும்.

[Sri V. Sankaran] [8th April 1958

அப்படியில்லாமல் அன்றுடம் வாங்குவதென்றால் அது என்றைக்கும் தீராத ஒரு பிரச்னையாக, போகப் போக வளர்ந்துகொண்டே போகக் கூடிய பிரச்னையாகவும் இருக்கும்.

ஆரம்பப் பள்ளி சம்பந்தமாக ஒரு மைல் ரேடியஸ்ஸுக்குள் இன்னொரு பள்ளிக்கூடம் இருக்கக்கூடாது என்று இருக்கிறது. முனிசிபல் நகரங்களில் அந்த விதி தளர்த்தப்படவேண்டும்.

பாடப் புத்தகங்கள் வெளியிடும்போது, அரசாங்கம் வெளியிட்டாலும் சரி, தனிப்பட்டோர் வெளியிட்டாலும் சரி அது பற்றி நான் ஒரு யோசனை கூற விரும்புகிறேன். கான்வென்ட் பள்ளிக்கூடங்களில், பரீட்சை முடிந்த ஒரு வாரத்திற்குள்ளேயே முடிவை அறிவித்துவிட்டு, அடுத்த வருஷத்திற்கான பாடப் புத்தகங்களைத் தயாராக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்தந்த பள்ளிக்கூடங்களிலேயே புத்தகக் கடை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். பரீட்சை நடந்த ஒரு வாரத்திற்குள்ளேயே புத்தகங்களைத் தயாராக வைத்துக்கொண்டிருப்பதனால் உடனே வாங்கிக்கொண்டு, விடுமுறைக் காலங்களில் படித்துக்கொள்வதற்கு வசதியாக இருக்கும். கான்வென்ட் பள்ளிக்கூடங்களில் இருக்கும் இம்முறையை நாம் மற்றப் பள்ளிக்கூடங்களிலும் கையாண்டால் நன்றாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஏழ்மை நிலையில் உள்ளவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுப்பது பாராட்டத் தக்கது. ஹரிஜனங்களாக இருந்து கிறிஸ்துவ மதத்திற்கு மாறியவர்களுக்கும் இப்பொழுது கல்விச் சலுகை விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது, ஸ்காலர்ஷிப்பும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. கிறிஸ்துவர்கள் என்ற முறையில் அவர்கள் ஏற்கெனவே மிஷனரிகளிடமிருந்து ஓரளவு நன்மை அடைந்து வருகிறார்களா, சலுகை பெறுகிறார்களா ? அப்படிப்பட்டவர்களுக்கே அரசாங்கம் மீண்டும் இத்தகைய சலுகைகளை அளித்துக் கொண்டிருக்கிறதா ? இம்மாதிரி இரண்டு வழிகளிலும் நன்மை பெறுகிறார்களா என்பதை அரசாங்கம் ஆலோசிக்க வேண்டும். ஒரே சமயத்தில் இரண்டு இடங்களிலும் சலுகை பெறலாம் என்ற நிலைமைக்கு இடம் அளிக்கக்கூடாது. கிறிஸ்தவர்களாக மதம் மாறிய ஹரிஜனங்கள் விஷயத்தில் நன்றாக பரிசீலிக்க வேண்டும். இல்லாவிட்டால் இரண்டு இடங்களிலும் சலுகை பெறும்படியான நிலைமை ஏற்படும். அந்த விதமான தப்பு செய்வதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, எல்.டி. பயிற்சி பெற்ற உபாத்தியாயர்களுக்கு பென்ஷன் திட்டம் இருக்கிறது. அது யோசிக்கப்பட்டு வருவதாகச் சொல்லப்படுகிறது. அதையும் சீக்கிரம் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

## III.—ANNOUNCEMENTS BY THE HON. THE SPEAKER—*cont.*

### (4) COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

MR. SPEAKER : I have to announce to the House that under Rule 196 (1) of the Madras Legislative Assembly Rules I have nominated the following Members to serve on the Committee on Subordinate Legislation :—

Sri R. Srinivasa Iyer.
Sri S. Lazar.
Sri T. T. Daniel.
Srimathi A. Suares.
Sri A. R. Subbiah Mudaliar.
Sri M. D. Ramasami.
Srimathi Dr. Sathiyavanimuthu.

8th April 1958] [Mr. Speaker]

Sri K. Vinayakam.
The Hon. Sri C. Subramaniam.
Sri S. Nagaraja Monigar.

Under Rule 197 of the Assembly Rules I nominate Sri R. Srinivasa Iyer to be the Chairman of the Committee.

## VI.—BUDGET FOR THE YEAR 1958-59—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958-59—*cont.*

### DEMAND XV—EDUCATION—*cont.*

**Sri P. S. CHINNADURAI :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, கல்வித் துறைக்கென நாம் பட்ஜெட்டிலே ஒதுக்கியிருக்கும் பணம், ஒரு கணிசமான தொகைதான் என்பதிலே ஐயமில்லை. ஆனால் இவ்வாறு ஒரு கணிசமான தொகையைச் செலவழிப்பதற்குரிய முழுப் பயனையும் அடையவேண்டுமானால், ஆசிரியர்களுடைய தரத்தை உயர்த்தவேண்டும் என்று நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆசிரியர்களுடைய தரம் உயரவேண்டும் என்று நான் குறிப்பிடும்போது, அவர்களுடைய வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்தாலொழிய, அவர்களுடைய கவனம் பெரிதும் இந்தக் கல்வித் தரத்தை உயர்த்துவதிலே செலுத்துவதற்கு இருக்காது, என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். ஒவ்வொரு ஆண்டிலும் ஆசிரியர்களுடைய குறைகளைக் குறித்து இந்தச் சபையிலே பேசப்பட்டு வருகிறது. இந்த ஆண்டிலேயேயும் ஆசிரியர்களுடைய குறைகளைத் நிவர்த்தி செய்யவேண்டுமென்று அங்கத்தினர்கள் பலர் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இன்றைக்கு ஆரம்ப ஆசிரியர்களுடைய குறைகளைக் குறித்து பல அங்கத்தினர்கள் இந்தச் சபையிலே மீண்டும் நினைவுபடுத்தியிருப்பது கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்தை கவரும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

சில தினங்களுக்கு முன்னால் ஆரம்ப ஆசிரியர்கள் ஒரு பெரும் ஊர்வலமாக பல பாகங்களிலிருந்து புறப்பட்டு, சென்னை நகரத்திற்கு வந்து மக்கள் முன்னால் தங்களுடைய குறைகளை எடுத்து விவரிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது என்பதையும் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஆசிரியர்கள் தங்களுடைய கோரிக்கை அட்டைகளை ஏந்திக்கொண்டு ஊர் ஊராகச் செல்ல வேண்டிய அவசியம் ஏன் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் கவனிக்கத் தவறினால், நம்முடைய கடமையிலிருந்து தவறியதாகத்தான் ஆகும் என்று நான் குறிப்பாக வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஆரம்ப ஆசிரியர்கள் இவ்வாறு ராஜ்யமெங்கும் பெரும் கிளர்ச்சியிலே ஈடுபடுவதற்கு ஒரு நிர்ப்பந்தம் ஏற்படுமானால் அதற்குரிய காரணங்களையும் கண்டு, அவைகளைக் களைந்தெறிவதற்கு நாம் உண்மையாகவே முயற்சிக்க வேண்டும் என்று இந்த இலாகாவை நிர்வகிக்கக் கூடிய அமைச்சர் அவர்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். ஏதோ தொழிலாளர்கள் கிளர்ச்சி செய்வதைப்போல் என்று கருதி அலட்சியமாக இருந்துவிடக்கூடிய நிலைமை ஏற்படக் கூடாது. அவர்களுக்கு வேறு யாரும் இல்லை. நாம்தான் இருக்கிறோம். மக்கள் இருக்கிறார்கள். மக்களுடைய பிரதிநிதிகளாக சட்டசபை அங்கத்தினர்களும் அமைச்சர்களும் இருக்கிறார்கள். அரசாங்கமே ஆரம்ப ஆசிரியர்களை சரிவர நடத்துவதற்கு தவறினால் இவர்கள் எப்படி பிறர் இடத்திலே போய், அவரவர்கள் தொழிலாளர்களை சரிவர நடத்த வேண்டுமென்றும் அவர்களுக்கு ஜீவனச் சம்பளம் கொடுக்க வேண்டுமென்றும் குறிப்பிடுவதற்கு முடியும் என்று நான் கேட்க ஆசைப்படுகிறேன்.

ஆரம்ப ஆசிரியர்கள் தங்களுடைய சாதாரண வாழ்க்கையை நடத்துவதற்குக்கூட போதிய வருமானம் இல்லாத நிலைமையிலே அல்லல் உறுகிறார்கள் என்றால், அவர்கள் எப்படி நல்ல பிரஜைகளைத் தோற்றுவிக்க தங்கள் முழு கவனத்தையும் செலுத்த இயலும் என்று கேட்கின்றேன். ஆசிரியர்களுடைய இந்தக் குறையை நாம் போக்குவதற்கு

[Sri P. S. Chinnadurai] [8th April 1958

முயலாத வரையில் கல்விக்காக செலவழிக்கக் கூடிய பணம், குறிப்பாக ஆரம்பக் கல்விக்காக செலவழிக்கும் கோடிக்கணக்கான ரூபாய்கள் வீணுகப் போய்விடுமோ என்று நான் உண்மையாகவே அஞ்சுகிறேன்.

இவ்வாறு ஆரம்பப் படிப்பிற்காக என்று நாம் ஒதுக்கி வைக்கும் பணத்தோடு இன்னும் கொஞ்சம் அதிகத் தொகையை ஒதுக்கியாவது ஆரம்ப ஆசிரியர்களுடைய குறைகளை நீக்குவதற்கு முற்பட வேண்டுமென்று தான் நான் கோருகிறேன். அவ்வாறு செய்வதை விடுத்து, ஆரம்ப ஆசிரியர்களுக்குள்ளேயே பிரிவை உண்டாக்குவதற்கோ அவர்கள் ஒரே கூட்டணியாக செயல்படுவதை தடுப்பதற்கோ, ஒன்றுக்கு மேற்பட்ட சங்கங்களைத் தோற்றுவித்து அவர்களைப் பிரிவினைப்படுத்துவதற்கோ இந்த அரசாங்கம் முயலுமானுல், அவர்கள் தங்களுடைய கடமைகளிலிருந்து தவறுவது மாத்திரமல்ல, வேண்டுமென்றே முதலாளிகள் போக்கிலே சூழ்ச்சிகளைக் கையாளுவதாகத்தான் இருக்குமென்று நான் குறிப்பிடுவேன். ஏன் குறிப்பிடுகிறேன் என்றுல் முதலாளிகள் தான் போட்டிச் சங்கங்களை தோற்றுவிப்பார்கள், ஆதரிப்பார்கள், ஊக்குவிப்பார்கள். அதேபோல் இந்த அரசாங்கம் போட்டி ஆசிரியர்கள் சங்கங்களை உண்டாக்குவதற்கும் ஊக்குவிப்பதற்கும் முயற்சிக்கிறுர்களா என்று அறிய விரும்புகிறேன். அந்த எண்ணத்தை கைவிடுத்து, அதற்கு பதிலாக ஆரம்ப ஆசிரியர்களின் பொதுவான குறைகளைக் கவனித்து, அவைகளைக் களைந்து எறிய உண்மையான முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று இந்த அமைச்சர் அவையை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆரம்ப ஆசிரியர்களின் குறைகளைக் கவனிக்க எல்லாத் துறையிலிருந்தும் வற்புறுத்தல் வரும்போது, ஆரம்ப ஆசிரியர்களுக்கு மாத்திரம் என்ன பாரம், தடையாக இருக்கிறது என்று இந்தச் சபை தெரிந்து கொள்ளுவதற்கு பாத்தியதை இருக்கிறது. ஆரம்ப ஆசிரியர்களுடைய பிரச்னையைக் கவனிக்க வேண்டும். ஏனென்றுல் இது கனம் அமைச்சர் அவர்களுடைய சொந்த வீட்டு விஷயம் அல்ல. அவர்கள் சொந்த முறையில் தனிப்பட்ட முறையில் உணர்வும் ஊக்கமும் இருந்தால் உற்சாகமும் இருந்தால் கவனிப்பது, இல்லாவிட்டால் கவனிக்காமல் தள்ளி விடுவது
11-15 a.m. என்று இருக்க முடியாது. அல்லது எதிர்க் கட்சிக்காரர்கள் சில பேரைக் குறிப்பிட்டு ஆரம்ப ஆசிரியர்கள் பேசச் சொல்லியிருக்கிறுர்கள் என்ற ஒரே காரணத்தினுல் அரசியல் பிரச்னையாக அலட்சியப்படுத்தி விடுவது தவறு என்பதாக எச்சரிக்க விரும்புகிறேன். இந்த எச்சரிக்கை இந்த ஆண்டோடு கடைசியாக இருக்கவேண்டும். அடுத்த ஆண்டிலும் இந்தமாதிரி எச்சரிக்கை வருவதற்கு இந்த அரசாங்கம் அனுமதித்தால் நிச்சயமாக மக்கள் மத்தியிலே பதில் சொல்லவேண்டிய நிலைமை உண்டாகிவிடும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம் நாட்டில் பல தொழில்கள் வளர்ச்சியுறவேண்டுமே என்று சொல்லும்போது தொழில் நுணுக்கப் பயிற்சி பெற்றவர்கள் தேவைப்படுகிறுர்கள் என்று சொல்லப்படுகிறது. அப்படிப் பதில் சொல்கிற அமைச்சர் அவர்கள் நாட்டுக்குத் தேவையான அளவு தொழில் நுணுக்கப் பயிற்சி பெற்றவர்களைத் தயாரிப்பதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறுர்களா, அதற்குப்போதுமான அளவு நிதி ஒதுக்கியிருக்கிறுர்களா என்று பார்த்தால் மிகவும் வருந்தவேண்டியதாகத்தான் இருக்கிறது. சென்ற ஆண்டில், யூனிவர்ஸிடி தலைப்பில் சர்க்கார் ஆர்ட் கல்லூரி தொழில் நுட்ப வளர்ச்சிக்கு ஒதுக்கப்பட்டது 44 லட்சம் என்றுல் செலவழிக்கப்பட்டது 33 லட்சம்தான். இதனுல் போதுமான அளவு தொழில் நுணுக்கப் பயிற்சி உடையவர்களைத் தயாரிக்க முடியுமா என்று அறியவிரும்புகிறேன்.

அன்றைக்கு ஸ்ரீ வேதரத்தினம் பிள்ளை அவர்கள் பேசும்போதுகூட வேலையில்லாதவர்களைப் ப்ரட்யூஸ் பண்ணுகிற தொழிற்சாலையாக விளங்குவது நம் நாட்டிலுள்ள கல்லூரிகள் என்பதாகச் சொன்னுர். அதை நான் ஆதரிக்கிறேன். அப்படிப்பட்ட கல்லூரிகள் அதிகப்படுவதைக் தடுத்தாவது தொழில் கல்லூரிகளை அதிகமளவுக்கு ஏற்படுத்துவதற்கு நம் சர்க்கார் முயற்சி செய்ய வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8th April 1958] [Srimathi A. Suares]

maximum salary and after that there is no increase or promotion. The School Assistant's scale in Grade II is 85—175 and in Grade 1, 165—245. In this case a teacher takes 25 years to reach the maximum salary, and 75 per cent of the School Assistants do not get further promotion and retire on the salaries just mentioned. These scales of pay have been in force for a long time during which period the cost of living has increased four-fold in certain items of expenditure. The dearness allowance now paid does not go a long way to meet the high cost of house rent, food and clothing. If we try to divide the salary of Rs. 45/- minus Provident Fund contribution, under the heads 'house rent, lighting, food, clothing, education of children, medical charges', for a small family of 5 to 6 members, we will find it an impossible task. The teacher has to maintain a certain status to be respected in school. With increasing prices, this becomes more and more difficult.

The School Assistants are not better off with a starting salary of Rs. 85. A graduate teacher studies for four years in an Arts or Science College and one year in a training college. If we compare the scale of pay of a graduate teacher with that of a graduate working in other services, we will find that the School Assistant has a poorer start in life. A Police Inspector is started on a salary of Rs. 175, a Jailor on Rs. 200, a Matron of a Jail on Rs. 125, a Tahsildar and a Sub-Magistrate on Rs. 200 a Forest Ranger on Rs. 125, a Head Nurse on Rs. 150 and an Upper Division Clerk on Rs. 90. Compared with these salaries, the salary the School Assistant in Grade II gets is low. It may be argued that school teachers have shorter hours of work and longer vacation. The work of a teacher does not end when the school bell rings at 4 or 4-30 in the evening. She has to attend to games or extracurricular activities and also to take her work to her home. He or she has to prepare lessons for each day and has to correct piles of exercise books every day. This work will go on to mid-night in the case of scrupulous and conscientious teachers. Of course, the teacher gets long vacation but earned leave is proportionately less on this account.

In the present day, classes have increased in size. Though the maximum strength is 40, we hear of classes with a strength of 45 and even 50. Most people cannot realize the difficulty in handling such large classes in class rooms that are usually limited in size. To maintain discipline and to give individual attention to 50 young, lively and perhaps mischievous children, is a very difficult task. A parent with half a dozen children, finds it difficult to manage them during long holidays and waits for the opening of schools but a teacher has to do her job day in and day out for years together.

When salaries are insufficient, teachers try to supplement their income through private tuition. If private tuition is not controlled and restricted by the school authorities, it becomes an evil. Too many hours are spent on private tuition with the result that legitimate work in schools as well as preparation of lessons at home and correction of excercises, suffer. When teaching becomes inefficient, almost every child needs private tution, and further evils follow in its wake, viz., partiality, dishonesty, neglect of duty,

[Srimathi A. Suares] [8th April 1958

etc. This practice forms a vicious circle which has to be watched. If the Government keep down the strength of classes there would be greater efficiency.

Even a small increase of, say, Rs. 5 a month in the basic salary will entail high expenditure but this extra expenditure is necessary to better the lot of the Teacher. Perhaps one grade of Teachers can be benefited at a time in the remaining years of the Second Five Year Plan period. Owing to low salaries the Department does not get the best type of Teachers. Those who can secure lucrative jobs in private firms or in other Departments of Government, will not come forward to take up the teaching profession. Those who do take up the teaching profession, prefer to teach outside the State, where higher scales of pay prevail. The State cannot afford to lose good teachers. If higher salaries are paid this exodus of teachers can be stopped.

The teaching profession is a vocation and a mission unlike other jobs. The younger folk of the country are trained by teachers in their most impressionable age. What a man or woman is in later life can be traced back to the kind of teachers he or she had in early years. Perhaps the Members of this House owe their present position and their present ability to the foundation laid by their teachers in their school days. In bettering the lot of teachers the Government will be bettering the training of the whole Nation.

All teachers must have been pleased to read in the newspapers of the Scheme, for 'national awards for teachers' in recognition of the services of teachers ' who have worked in a spirit of dedication and service'. It is not so much the award of Rs. 500/- that the teachers will appreciate, but the recognition given to their service which will raise their prestige. In the Lok Sabha recently the Union Minister for Education made a statement that from next year financial assistance will be given for all categories of teachers.

(Deputy Speaker in the Chair.)

For the last two years the Central Government have been assisting the elementary grade teachers and secondary grade teachers. With this financial assistance, I am hopeful that the Madras Government will consider seriously the question of improving the basic salaries of teachers. In doing so, the Government will only be placing the teaching profession on a level with other professions which now offer a better starting salary.

**Sri V. K. KRISHNAMURTHI :** அவையின் தலைவரவர்களே, மதி வளம் பெருக நிதிவளம் கோரும் இம்மான்யக் கோரிக்கையை வரவேற்றாதரிக்கின்றேன்.

12-05 p.m. உவமையற்ற இலக்கணத்தாலும், உயிருள்ள இலக்கியத்தாலும் தமிழகம் அலங்கரிக்கப் பெற்றிருப்பது பாராட்டற்குரியதே. இலக்கண நூல் தலைவராகவும் வாழ்வியலின் விளக்காகவும் விளங்குகின்றதாதலினாலே பெருமிதத்திற்கு கல்வி முதன்மை என்றியம்பியிருத்தல் வெள்ளிடைமலை, அதன் அடிவழி வந்த தமிழ்மறை கல்லாதார் விலங்கினத்துடன் வைத்தெண்ணப்படுவரென்றும் அறிவுடையார் எல்லாமுடையர் என்றும் கூறியிருத்தலாலே கல்வியின் இன்றியமையாமையை நாம் நன்குணர்கிறோம்.

8th April 1958] [Sri V. K. Krishnamurthi]

நம் அரசாங்கம் கல்வியின் இன்றியமையாமையை நன்குணர்ந்து வருவாயில் ஐந்திலொரு பகுதியை கல்விக்குச் செலவழிப்பது நல்லாட்சிக்கோர் எடுத்துக்காட்டு. என்றாலும் ஆரம்பக்கல்விக்கு மிகப் பெருந்தொகை செலவழிப்பதைக் கண்டு களிபேருவகை எய்தினும் அதனாலானபயனைக் காண்கையில் கலக்கமுறாமலிருக்க முடியவில்லை. முதல் வகுப்பில் 40 மாணவர்கள். ஐந்தாம் வகுப்பில் 20 மாணவர்கள் என்று ஆண்டிற்கொருமுறை ஒருவர் பின் ஒருவராக ஓடி ஒளிந்தனர். நிலவும் வாய்ப்பை வழுவவிடாமல் இருகப்பற்றின் செலவுக்கும் உழைப்பிற்கும் பலனுண்டு. ஆதலால் படிப்படியாக ஒவ்வொரு ஆண்டுக்கும் கட்டாயத்தை ஏற்படுத்தினால் பலனுறுவர். கல்வியின் தரம் ஆசிரியர்களின் புலமையைப் பொறுத்திருக்கிறது. இலக்கண-இலக்கிய அறிவு ஓரளவு பெற்றிருந்தால் பிழையற கல்வியளிக்க இயலுமாதலால் ஆசிரியர் பயிற்சி பெறும்பொழுதே தமிழ் இலக்கண-இலக்கிய அறிவு பெற ஆவன புரிய வேண்டும். ஏழை மாணவர்களுக்கு இலவச உணவு கொடுக்க அரசாங்கம் முன்வந்திருப்பது உவகையுற வைக்கிறது, பசிவந்திடில் பத்தும் பறந்திடும் என்ற ஔவையின் அருள் வாக்கும், பிடித்த கல்வி பெரும்புணை விடூஉம் பசிப்பிணி என்னும் பாவி என்ற சீத்தலை சாத்தனாரின் நல்வாக்கும் நினைவிற்கு வருவதால் பழங்காலப் புலவர்களின் பொன்னுரை நம் அரசாங்கத்தால் நடைமுறையில் உருவாகின்றன. என்று பெருமையுடன் பகர்கின்றேன்.

பள்ளி இறுதி தேர்வுக்குச் செல்லும் மாணவர்கள் பேர் பாதி தேர்தலில் தேறவில்லை, தவறிய மாணவர்கள் கதி அந்தோ, செலவிடும் தொகைக்குப் பலன் பாதிதான் கிட்டுகிறதெனினும் தனியாக மேற்படி மாணவர்களுக்கு தனி பயிற்சி நல்கி குறைந்தது 80 சத விகிதம் தேறக் கூடிய வகை புரிய வேண்டுமென்றதால் மார்க்குகள் கூட்டிப் போடவேண்டுமென்ற பொருள் அல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன். கல்லூரிகளின் பாட மொழியாக தமிழ் இருக்க வேண்டுமென்ற கருத்து உருவாகி நிரம்ப ஆதரவு பெற்று வருகிறது. விஞ்ஞானப் பாடங்களைக் கற்றுக் கொடுப்பதில் கருத்து வேறுபாடிருக்கிறது. விஞ்ஞானப் பகுதிக்கு கலைச் சொற்கள் எவை என்ற வாதத்திலிறங்காமல் அனைத்துலகக் கலைச் சொற்களைக் கையாள வேண்டுமென்ற முடிவிற்கு விரைவில் வந்து தீர வேண்டும். இல்லை எனின் அலை ஓழிவது எப்பொழுது தலை முழுகுவது எப்பொழுது என்ற நிலை நீடிக்குமானால் முடிவு காணாது அவலத்தில் மூழ்கிக் கொண்டிருக்க நேரிடும். ஆதலால் தமிழிலே கல்லூரிகளில் பாடம் பயிற்றுவிக்கப் படவேண்டுமென்ற முயற்சி விரைவில் நிறைவேற அரசினர் ஆவன புரிய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கல்வி மான்யத்தைப்பற்றிய கோரிக்கையில் வர்க்கமற்ற சாதியற்ற சமுதாயம் படைக்க கல்வியின் குறிக்கோள் அரன் செய்ய வேண்டுமென்ற நன்னோக்கத்தை நவின்றிருப்பது பாராட்டி—வரவேற்று—போற்றிப்புகழவேண்டியதன்றி வேறென்ன ? பொன்னனை இவ்விரு கொள்கைகள் நிறைவேற நந்தமிழிலக்கியம் அரன்செய்கிறதென்று பெருமையுடன் ஆன்ற சான்றுகளுடன் கூறுகிறேன்.

ஜாதி என்ற சொல் தமிழல்ல ; சாதி என்ற சொல் நீர்வாழும் பிராணிகளின் பிரிவுகளுக்குக் கூறப்பட்டிருக்கிறதேயன்றி மண் மீதிலங்கும் மக்களினத்திற்கும்—விலங்கினத்திற்கும் இல்லவே இல்லை என்று இலக்கியம் பயின்றதால் அறுதியிட்டு உறுதியுடனியம்புகிறேன். புறநாகரிகங்கள் நுழைந்ததால்—புற கொள்கைகள் அலை அலையாகப் புரண்டோடி நம் நாட்டில் புகுந்ததால் ஜாதி என்ற சொல் நுழைந்து அகதி போல் விளங்குகிறது. ஜாதி என்னும் பேய் நம் தமிழ் சமுதாயத்தில் நுழைந்து உயர்வு-தாழ்வு ; பிரிவு-பிளவு ஏற்படுத்திப் பலபிரிவினைகளை உண்டாக்கி ஊறு விளைத்ததென்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். " பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்.............." என்ற அறம் பிறந்த தமிழகத்தில் ; " உயர்திணையென்மனார் மக்கட் சுட்டே" என்ற நற்கொள்கை பிறந்த தமிழகத்தில் ஜாதி நுழைந்தமை தீவினையின் காரணமன்றி வேறென்ன ? அண்மையில் நம் தமிழகத்தைச் செம்மையாக்க சைவசித்தாந்த சமரச ஒளி ஏந்திய வள்ளலார் இராமலிங்க அடிகள்

" நால் வருண ஆசிரம ஆச்சார
நவின்ற கலை சரிதமெல்லாம் பிள்ளை விளையாட்டேன்று "

மிகவும் வன்மையாகக் கண்டித்தமையை நிறைக்காமலிருக்கவில்லை.

வர்க்கமற்ற சமுதாயம் என்ற பொழுது மிண்டிய மாயா வாதத்தை முன்னிருத்தி உடையவருக்கும் இல்லாதவருக்கும் போராட்டத்தைக் கிளப்பி அவலம் நிகழ்கிற பொழுது அரசைக் கைப்பற்றி நிலத்தைப் பங்கிடுவது போல் அல்லாமல் வள்ளுவன் உரைத்த " பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்" என்ற பேரறத்தையும் " ஊருணி நீர் நிறைத்தற்றே—பேரறிவாளன் திரு " என்ற உயர் அறத்தையும் பின்பற்றி வர்க்கமற்ற சமுதாயத்தைப் படைப்ப தோடு, பைந்தமிழ் அன்னைக்குப் பன்னீராயிரம் பாமாலை புனைந்த கம்பனின் " எல்லோரும் எல்லாப்பொருளும் பெற்றிருத்தலாலே உடையாருமில்லை. இல்லாருமில்லை " என்ற கருத்து காரல் மார்க்ஸ் பிறப்பதற்குப் பன் னெடுங்கால முன்னரே பகர்ந்தமை பாராட்டற் குரியதே. நல்ல சமுதா யத்தைப் படைக்க தமிழ் இலக்கியம் அரண் செய்வதால் தமிழ் இலக்கியத் தின் பெருமை என்னே. தமிழ் இலக்கியத்தை நன்காராயின் உயரிய நல்ல சமுதாயத்தை உருவாக்க இயலுமென்று வகையுட னுரைக்கின்றேன்.

இருபதாம் நூற்றாண்டில் தமிழன் புனைந்த கட்டுரைகளில் பா. வே. மாணிக்க நாயகர் யாத்த " வடிவு திரிந்து அறிவு வளர்ந்த வரலாறு " என்ற கட்டுரை உலகப் புகழ் யெய்தவல்லது. இவர் தொடங்கிய தமிழ் ஒலி ஆராய்ச்சியை இவருக்குப் பின்னர் என் ஒப்பற்ற ஆசிரியர் கே. பி. சந்தோஷ் தொடர்ந்து ஆராய்ந்தாரெனினும் முற்றுப் பெறு முன் அவ் வுலகேதினுர். இவ்வாராய்ச்சியைத் தொடர்ந்து நடத்த தக்க புலவர்களை அரசினர் அணுகுவதுடன் அவர் கட்டுரையை வெளியிட்டு அன்னாருக்கு விழா கொண்டாடுமாறு அரசினரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தமிழுக்கு உயர்வு நல்க அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன். வழக்கொழிந்த மொழிகளெல்லாம் உலகப் புகழ் எய்தின, தமிழ் மொழி யோ வழக்கொழியவில்லை, உலகப் புகழ் எய்தவில்லை. காலன் வாய்ப் பட்ட இலக்கியங்களெல்லாம் உலகப் புகழ் எய்தின, தமிழ் இலக்கியமோ காலன் வாய்ப்படவில்லை—வாழ்வில் இரண்டறக் கலந்து விளங்குகிறது என்றாலும் உலகப் புகழ் எய்தவில்லை. ஆதலால் தமிழ்ப் பெருமையையும் இலக்கியப் பெருமையையும் பார் அறிய ஆவன செய்ய அரசினர் பணிவுடன் வேண்டுகிறேன்.

கரிசற்ற கல்வியும், ஆசற்ற அறிவும், கரையற்ற கலையும், புரையற்ற பண்பும், கட்டமைந்த ஒழுக்கமும் பெற்று நம் மக்கள் நலமெய்தி மொழி —நாகரீகம்—கலை—பண்பு வளர பாடு பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இக்கல்வி மான்யக் கோரிக்கையை ஆதரிக்கிறேன். வணக்கம்.

12-20 p. m.

SRI A. GOVINDASAMY : சட்ட மன்ற உதவி தலைவர் அவர்களே, கல்வி மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சமீபத்தில் அண் ணாமலை பல்கலைக் கழகத்தை மூடுவிழா செய்த பெருமை நமது கல்வி அமைச்சர் அவர்களை சார்ந்திருக்கிறது என்பதை நினைக்கும் பொழுது மிகவும் வேதனையாக இருக்கிறது. அங்கு மாணவர்கள் தவறுகள் செய் தார்கள், மாணவர்கள் தவருக நடந்து கொண்டார்கள் என்கிற ஒரு பட்டி யலையும் இங்கு கல்வி அமைச்சர் அவர்கள் படித்தார்கள். மாணவர்களை வெளியே அனுப்பி விட்டு கல்லூரியை மூடிவிட்டு பெருமிதத்தோடு இங்கே இருந்து கொண்டிருக்கிறார்கள். இந்த பிரச்னையை சுமுகமாக தீர்த்திருக்க லாம். மாணவர்கள் இதுவரையிலும் அனுமதி பெற்றுக் கொண்டு கல் லூரி விழாவுக்கு போனது கிடையாது. இப்போது நடந்த விழாவுக்கு அனுமதி வேண்டுமென்று கட்டளை போட்டிருக்கிறார்கள். அதன்படி மாண வர்கள் அனைவரும் அனுமதி பெற்றுக் கொண்டு தான் போயிருக்கிறார்கள், ஒன்றிரண்டு பேர்களை தவிர. இவ்விதம் போயிருந்தும் இந்த சம்பவம் நடந்திருக்கிறது. இப்போது என்ஜினியரிங் கல்லூரி மூடிய காரணத்தால் இப்போது பரிட்சை கழிந்த உடனேயே உத்தியோகம் கிடைக்கும் என்று நம்பிக் கொண்டிருந்த மாணவர்களுக்கு இப்போது உத்தியோகம் கிடைப்ப

தற்கு வசதியில்லாமல் இருக்கிறது. இதனால் அவர்களது ஸீனியாரிட்டி கிடைக்க முடியாத நிலைமை ஏற்படுகிறது. இன்ஜினியர்கள் நமக்கு தேவை தேவை என்று சொல்லிவிட்டு, இவ்விதம் என்ஜினியரிங் கல்லூரியை மூடியதற்கு காரணம் என்ன என்று கேட்கிறேன். மாணவர்களுடைய குழப்பங்கள், இதற்கு முன்னாலும் அண்ணாமலை பல்கலை கழகத்தில் ஏற்பட்டிருக்கிறது. அந்த நேரங்களில் எல்லாம் துணை வேந்தர்களாக ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரி அவர்கள் ரத்தினசுவாமி அவர்கள், ரெங்கநாதன் அவர்கள் போன்றவர்கள் இருந்திருக்கிறார்கள். இந்த மாதிரி குழப்பங்கள் நடந்த நேரங்களில் எல்லாம் கல்லூரியை மூடியது கிடையாது. ஆகவே இந்த பிரச்னையில் கல்வி அமைச்சர் அவர்கள் ஒரு முடிவு காண்பதற்கு தவறி விட்டார்கள் என்பது அவருடைய மனசாட்சியே சொல்லும் என்று நினைக்கிறேன். அவர் செய்ய வேண்டிய கடைமையி லிருந்து வழுக்கி விழுந்து விட்டார் என்று தான் சொல்ல வேண்டியிருக் கிறது. இங்கே வைத்து குற்றம் சாட்டாமல் இருந்து விட்டு வெளியே போய் திராவிட முன்னேற்ற கழகம் தான் இந்த குழப்பத்திற்கு காரணம் என்று சொல்லியிருக்கிறார். உண்மையிலேயே அங்கு இதுவரையிலும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பேசுவதற்கு அனுமதிக்கப்படவில்லை. அவ்விதம் யாராவது அங்கு சென்று பேசியிருப்பார்கள் என்றால் அதுவும் இலக்கியத்தின் பேரில் தான் பேசி யிருப்பார்கள். ஆகவே உடனடியாக கல்லூரியை திறந்து பரிட்சையை நடத்துவதற்கு அனுமதிக்க வேண்டும். என்று கேட்டுக்கொள்கிறேன். அது ஒரு ஆட்டணமஸ் பாடி என்று சொல்லிவிடக் கூடாது. ஏனென்றால் நாம் அதற்கு மான்யம் கொடுக் கிறோம். அங்கே யிருந்த கல்லூரியின் ஸ்தாபகரின் உருவச் சிலையின் பக்கத்திலிருந்த கொட்டகை கொளுத்தப்பட்டது என்று இங்கே சொல்லப் பட்டது. அது வருந்தக்கூடிய செய்திதான். அதை மாணவர்கள் செய்ய வில்லை என்று நான் விசாரித்ததிலிருந்து தெரிகிறது. அதை வேண்டு மென்றே சில விஷமிகள் செய்திருக்கிறார்கள் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மாணவர்கள் பேரில் வீணாக பழியை சுமத்துவதற்காக இவ்விதம் செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன். அடுத்தபடியாக இந்தி மொழி படிக்கின்ற விஷயத்தைப்பற்றி குறிப்பிடும் போது நம் ராஜ்யத்தை தவிர மற்ற இடங்களில் மாணவர்கள் இரண்டு மொழி படித்தால் போதும் என்று இருக்கிறது. ஆனால் நமது நாட்டி லுள்ள மாணவர்கள் மூன்று மொழிகள் படிக்க வேண்டி யிருக்கிறது. கல்வி திட்டத்தில் வேறு ஏதாவது இந்தி மொழி படித்தால் போதும் என்று சொல்லி யிருக்கிறதே என்று சொல்லலாம். ஆனால் வேறு இந்திய மொழி படிப்பதற்கு மொழி ஆசிரியர்களை நியமிப்பதில்லை. இந்தி ஆசிரியர்களைத்தான் நியமித்திருக்கிறார்கள். இதை நாங்கள் வன்மையாக கண்டிக்கிறோம். ஆசிரியர்களுடைய குறைகள் இருப்பது வரையிலும் கல்வி யின் தரம் உயருவது கஷ்டமாகத்தான் இருக்கும். இதைப்பற்றி எத்த னையோ தலைவர்கள் எடுத்துக் கூறினார்கள். ஆசிரியர்கள் தங்களுடைய குறைகளை போக்குவதற்கு எதிர் கட்சிகளிடம் வந்து சொன்னால்தான், அதன்மூலம் அதற்கு நிவாரணம் ஏற்பட்டு அதன் மூலம் கல்வியின் தரம் உயரும் என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். 1—7—58- லிருந்து ஒரு வகுப்பில் 35 முதல் 69 வரையிலும் பிள்ளைகள் இருந்தாலும் ஒரே ஒரு ஆசிரியர் தான் வேலை பார்க்க வேண்டியிருக்கிறது. நான் சொல்லுவது 35-க்கு மேல் கூடுதலாக 36 ஆக இருந்தாலும் இரண்டு ஆசிரியர்களை போட வேண்டும். இருபது மாணவர்களுக்கு குறைவாக இருந்தால் வகுப்பை நடத்த முடியாது என்று கூறுகிறார்கள். இவ்விதம் இருந்தால் பல மாணவர்கள் படிக்க முடியாமல் துரத்தப்படுவார்கள் என்பதுதான் பொருள். ஆகவே இதையும் சர்க்கார் ஆலோசனை செய்து பார்க்க வேண்டும். அதோடு கல்வியின் தரம் குறையாமல் இருக்க வேண் டுமென்றால், கல்விக்காக அதிகப்படியாக வேலை செய்கின்ற ஆசிரியர்க ளுடைய குறைகளை நாம் நீக்கியாக வேண்டும். 1—4—58- முதல் ஒன்று முதல் ஐந்து வகுப்பு வரை நடத்தப்படும் பள்ளிகளில் தலைமை ஆசிரியர் இல்லாத இடத்தில் செக்கண்டரி கிரேட் ஆசிரியர்களை ஹையர் கிரேடில் நியமிக்கிறார்கள். அப்போது அவருக்கு ஹையர் கிரேட் சம்பளம் தான் கிடைக்கிறது. இதை நிறுத்தியாக வேண்டும். இவ்விதம் செக்கண்டரி

[Sri A. Govindasamy] [8th April 1958

கிரேட் பாஸ் பண்ணினவர்கள் ஹையர் கிரேட்டில் மானேஜ்மெண்டு ஸ்கூலில் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. இந்தப் புதிய உத்தரவினால் இந்த நிலைமை ஏற்படுகிறது. இதை நாம் தடுத்தாக வேண்டும். அதோடு மனேஜ் மெண்ட் பள்ளிக்கூடங்களில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்க வேண்டும். அவர்களுக்கு டயரக்ட் பேமெண்ட் இருக்க வேண்டும். ஆசிரியர்கள் மற்றும் பல குறைகளைத் தெரிவித்திருக் கிறார்கள். அதில் முக்கியமாகச் சில குறைகள் இருக்கின்றன. அதாவது அவர்களுக்கு மேல்சபையில் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும். பி.ஏ. படித்தவர்களுக்கும் செக்கண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கும் பிரதிநிதித்துவம் இருப்பதுபோல் அதிகமாக இருக்கக்கூடிய மற்ற ஆசிரியர்களுக்கு பிரதி நிதித்துவம் கொடுக்க வேண்டும். அப்போதுதான் அவர்களுடைய குறை களை எடுத்துச் சொல்வதற்கு வசதியும் வாய்ப்பும் ஏற்படும். அதோடு ஆசிரியர்களுக்கு என்று வீடு இல்லாததினால் வெளியூர்களிலிருந்து வந்து வேலை பார்க்க வேண்டியிருக்கிறது. இதன் காரணமாக தண்டனை பெற வேண்டியிருக்கிறது. அதோடு சில சமயங்களில் சமாதானம் எழுதிக் கொடுக்க வேண்டிய நிலைமையும் ஏற்படுகிறது. ஆகவே பள்ளிக்கூடங் களின் பக்கத்தில் வீடு கட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அல்லது மற்ற ஊழியர்களுக்கு கொடுக்கப்படுவது போல் வீட்டு வாடகை அலவன்ஸ் கொடுக்க வேண்டும். அதோடு அவர்களது அடிப்படைச் சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்று அடிக்கடி குறைப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். காங்கிரஸ் தீர்மானத்திலும் ஆரம்ப ஆசிரியர்களுக்கு 50 ரூபாயாகவும், செக் கண்டரி கிரேட் ஆசிரியர்களுக்கு 70 ரூபாயாகவும் உயர்த்த வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசிரியர் இந்தச் சர்க்காருக்கு எந்தெந்த விதங் களில் எல்லாம் உதவுகிறார்கள் என்று பார்த்தால் இந்தச் சட்டசபை தேர்தல் நேரத்தில் வாக்காளர் பட்டியல் தயாரித்துத் தருவது ஆசிரியர்கள் தான். உணவு நெருக்கடி காலத்தில் ரேஷன் கார்டு எழுதிக் கொடுத்தது எல்லாம் ஆசிரியர்கள்தான். ஆகவே இவ்விதம் எல்லாம் உதவி செய்து வருகிற ஆசிரியர்களுடைய சம்பளத்தை அவர்களது வேலைக்கு தகுந்த அளவு உயர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதே மாதிரி ஆசிரியர்கள் வோட்டர்ஸ் லிஸ்ட் தயாரிக்கும் பொழுது அவர்களுக்கு ஸ்பெஷல் அலவன்ஸ் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு கணவனும் மனைவியும் ஆசிரியர்களாக வேலை செய்து வருவதாக இருந்தால் அவர்கள் இரண்டு பேருக்கும் ஒரே பள்ளிக்கூடத்தில் வேலை கொடுப்பதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். இன்று எஸ்.எஸ். எல்.ஸி. தேர்தலில் 30 சத விகிதம் 50 சத விகிதம் தான் மாணவர்கள் தேர்ச்சி பெற்றிருக்கிறார்கள் என்றால் ஹைஸ்கூல்களில் பி. டி. டீச்சர்ஸ் கிடைப்பதில்லை. கணக்குப் பாடத்திற்குத் தனியாக பி.டி. படித்தவர்கள் போடுவதில்லை. காரணம் அவர்களுக்குச் சம்பளம் கூடுதல் கொடுக்க வேண்டியிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. அதே போல் விஞ்ஞான பாடத்திற்கும் ஆசிரியர்கள் கிடையாது. ஸயன்ஸ் பாடத்திற்கு ஏற்றவாறு லாபரட்டரி இல்லாத நிலைமை எத்தனையோ பள்ளிக்கூடங்களில் இருக்கிறது. அதைப் போக்குவதற்கு பி.டி.ஆசிரியர்களை போடவேண்டும். இன்றைக்கு டபிள் டிகிரி எடுத்தவர்கள் பி. எல். படித்தவர்கள் எல்லாம் நன்றாக சம்பாதித்துக் கொண்டிருக்கும் பொழுது இவர்களுக்கு குறைந்த சம்பளம் தான் கிடைத்துக் கொண டிருக்கிறது. ஆகவே இவர்களுக்குக் அடிப்படை சம்பளத்தை உயர்த்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே ஒவ்வொரு ஹைஸ்கூல் களிலும் தேவைக்கேற்றபடி ஆசிரியர்களை நியமிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அப்போது தான் பரிட்சையில் அதிக மாணவர்கள் தேற முடியும். மேலும் கடலூரில் ஒரு ஆர்ட்ஸ் கல்லூரி திறக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். எங்கள் ஜில்லாவில் அண்ணாமலை யூனிவர் ஸிட்டி இருக்கிறது என்றாலும் கடலூரில் ஒரு ப்ரி-யூனிவர்ஸிட்டி என்ற அளவிளாவது முதலாவதாக ஒரு கல்லூரி திறக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அங்கு ஆறு ஹைஸ்கூல்கள் இருக் கின்றன. தென்னாற்காடு ஜில்லாவின் தலைநகரமாக இருக்கிறது. ஆகவே கடலூரில் இதை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். கடலூரில் இல்லாவிட்டாலும் விழுப்புரம் தாலுகாவில் எங்காவது திறக்க

8th April 1958] [Sri A. Govindasamy]

வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது ஆரம்பப் பள்ளிகளை 500 பேர் ஜனத்தொகை கொண்ட இடங்களில் திறந்திருக்கிறோம் என்றும் இனிமேல் 300 பேர் ஜனத்தொகை கொண்ட இடங்களில் திறக்கப்போகிறோம் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் ஸ்கூல் லெஸ் ஸெண்டர் என்ற முறையில் பல இடங்களில் இருந்து வருகிறது. சில இடங்களில் ஆறு வயது குழந்தைகள் ஒரு மைல் தூரம் வரை பள்ளிக்கூடத்திற்குப் போய் படிப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகவே உடனடியாக எந்தெந்த கிராமத்தில் 300 பேர் ஜனத்தொகை இருக்கிறதோ அந்த கிராமங்களில் எல்லாம் ஆரம்பப் பள்ளிகளைத் திறக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்த அளவில் நிறுத்திக்கொள்கிறேன். வணக்கம்.

* SRI K. R. VISWANATHAN : உதவி அவைத் தலைவர் அவர்களே, இந்தக் கல்வி மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தக் கல்வி மான்யத்திற்காக 12 கோடி சொச்ச ரூபாய் ஒதுக்கியிருப்பதுபற்றி நாமெல்லோரும் மிகவும் மகிழ்ச்சி அடையவேண்டும். இந்த மாகாணத்திலே இருக்கிற செலவுத் தலைப்புகளிலே முதலாவதாக நிற்பது கல்வி மான்யக் கோரிக்கைதான் என்று சொல்லவேண்டும். முக்கியமாக, அறிவை இந்த நாட்டிலே பெருக்க வேண்டும், எல்லா மக்களிடையேயும் கல்வியை வளர்க்க வேண்டுமென்ற அடிப்படையான நோக்கத்தைக் கொண்டு பெரும் தொகை ஒதுக்கியிருப்பதைக் குறித்து கல்வி அமைச்சரை எல்லோரும் பாராட்டுகிறோம். இப்படி அதிகமாகப் பணத்தை ஒதுக்கிச் செலவு செய்கின்ற நேரத்திலே அண்மையில் நடந்த அண்ணாமலை பல்கலைக்கழக நிகழ்ச்சியானது, இவ்வளவு பெரும் தொகை வீணாக விரயமாகிறதோ என்று நினைக்கத் தக்க அளவுக்கு நம் எல்லோருக்கும் வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. இத்தகைய அறிவு வளர்ச்சிக்காகச் செலவழிக்கப்படுகின்ற பெரும் தொகையானது, மாணவர்களை பலாத்காரத்திலே ஈடுபடச் செய்து, ஒழுக்கக் கேட்டை வளர்த்து, கட்டுப்பாடற்ற தன்மையில் அவர்களை இழுத்துச் செல்லும்படியான கல்வியைப் புகட்டுவதற்காகத்தான் பயன்படுகிறதோ என்று நாம் வருந்த வேண்டிய நிலையிலிருக்கிறது. இதையெல்லாம் பார்க்கும்பொழுது "கல்லாத பேர்களே நல்லவர்கள், நல்லவர்கள் கற்றும் அறிவிலாத. . . ." என்ற தாயுமானார் கூற்றுக்கிணங்க, இம்மாதிரி ஒரு கல்வியை மாணவர்களுக்குப் புகட்டுவதை விட, அவர்கள் கற்காமலே இருப்பது மிகவும் சிறந்தது என்று தான் தோன்றுகிறது. இங்கே பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்களில் சிலர் அண்ணாமலைப் பல்கலைக் கழக நிகழ்ச்சிக்கு அங்கேயுள்ள துணை வேந்தரும், அடுத்தபடியாக அமைச்சரும், அந்த ஜில்லா கலெக்டரும், ஜில்லா போலீஸ் சூப்பிரண்டும்தான் பொறுப்பாளிகள், மற்றவர்கள் பொறுப்பாளியில்லை என்று வரிசையாகக் கூறிக் கொண்டே போனார்கள். அவர்கள் சொல்ல மறந்துவிட்டது ஒன்று என்று நான் நினைக்கிறேன். துணை வேந்தரை அங்கே அமர்த்திய வேந்தருக்கும், இந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவிய திரு. அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கும் பொறுப்பு உண்டு என்று சொல்லியிருப்பார்களே யானால், அதை நாம் வரவேற்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இத்தகைய ஒரு பெரிய ஸ்தாபனத்தை ஏற்படுத்தி, தமிழ் நாட்டிலே உள்ள மாணவர்கள் எல்லோரும் கல்வி கற்று அறிவு வளர்ச்சியடையவேண்டுமென்று நினைத்து இந்தப் பல்கலைக்கழகத்தை நிறுவிய அண்ணாமலைச் செட்டியாரின் சிலையை உடைக்கக் கூடிய அளவுக்கு மாணவர்கள் முன்வந்து விட்டார்கள் என்றால், அவர்களுடைய புல்லறிவை என்னவென்று சொல்வது என்று தான் வருந்தவேண்டியிருக்கிறது. ஸ்ரீ ஆசைத்தம்பி அவர்கள் வேகமாகப் பேசினார்கள். அமைச்சர் அவர்கள் பொறுப்பற்ற தன்மையிலே எந்தப் பரிகாரமும் தேடாமல் வந்து விட்டார்கள் என்றும், அங்கே இருக்கிற துணை வேந்தர் அந்தப் பதவியை நிர்வகிக்கத் தகுதியுள்ளவர்கள் அல்ல என்றும் கூறினர். அவர்கள் பேசிய ஆத்திரமான பேச்சிலிருந்து, அங்கே குழப்பம் நடைபெற்றது சரிதான் என்று அவர்கள் கூறுவது போது. குழப்பத்திற்கு அவர்கள்தான் காரணமோ என்றும் தான் நினைக்க வேண்டியிருக்கிறது. இந்த மாதிரிக் குழப்பமான நிலைமை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மட்டுமல்ல. இன்னும் பல உயர்நிலை 12-30 p.m.

[Sri K. R. Viswanathan] [8th April 1958

பள்ளிகளிலேயும் இருக்கிறது என்று தான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த நிலைமையை நீடிக்கச் செய்யாமல் ஒழித்துக் கட்டுவதற்கு என்ன வழி யிருக்கிறது என்பதை எல்லாக் கட்சித் தலைவர்களும் ஆராய வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் கூறிய யோசனையை வரவேற்கிறேன். அண்ணாமலை பல்கலைக் கழகம் மூடப்பட்டதைக் குறித்து நாம் வருந்த வேண்டிய நிலையில் இருக்கிறோம். அதை விரைவிலேயே திறந்து, அந்த மாணவர்களுக்குக் கெடுதி ஏற்படாமல் படிப்பினை காட்டி தேர்வுக்கு ஏற்பாடு செய்வதற்கு வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இம்மாதிரி குழப்பங்களுக்கும் கலவரங்களுக்கும் இடம் அளிக்காமல் ஒழுக்கமும் கட்டுப்பாடும் வளரக்கூடிய முறையிலே கல்வி போதிக்கப்பட வேண்டுமென்று வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். இம்மாதிரி கட்டுப் பாடு இருக்கிற இடங்களிலே, கிறிஸ்துவ சமயக் கல்லூரிகளிலும் சரி, ராமகிருஷ்ண வித்தியாலயங்களிலும் சரி, குழப்பங்களும், கலவரங்களும் ஏற்படுவது இல்லை. முக்கியமாக சமயக் கல்வி, கட்டுப்பாடு, ஒழுக்கம் முதலியவற்றை போதிக்க வேண்டிய அவசியம் இருக்கிறது. இது குறித்தேதான் சென்ற சில ஆண்டுகளுக்கு முன்னர் தமிழ் நாட்டிலுள்ள பள்ளிகளில் திருக்குறளை கட்டாயமாகப் போதிக்க வேண்டுமென்கிற ஒரு நல்ல முறையை அன்று கல்வி அமைச்சராக இருந்த திரு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்கள் கொண்டு வந்தார்கள். ஆனால் அத்தகைய ஏற்பாடு வெற்றிகரமாக நடைபெறவில்லை. வெற்றிகரமாக நடைபெறுவதற்கு முயற்சி எடுக்கவில்லையென்றே நினைக்கிறேன். பள்ளிக்கூடங்களிலே மனப்பண்பாடு ஏற்படுவதற்கு வேண்டிய சமயக் கல்வியாக இருந்தாலும் சரி, ஒழுக்கக் கல்வியாக இருந்தாலும் சரி, பொதுவான முறையில் எல்லா மாணவர்களுக்கும் போதிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இனி, நமது நாட்டிலே பல அனாதை இல்லங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. அங்கு தாய் தகப்பன் இல்லாத குழந்தைகளை எடுத்து வளர்த்து அவர்களை அறிவுடைய மக்களாக ஆக்குவதற்கு அவர்களுக்கு வேண்டிய கல்வியைப் புகட்டி, நாட்டினுடைய முன்னேற்றத்துக்குத் துணை புரியும் வகையில் அவர்களுக்கு வாழ்க்கையிலே வழிகாட்டி விடப்படுகிறது. அத்தகைய அனாதை இல்லங்களை சில சட்டசபை உறுப்பினர்கள் பொறுப்பு ஏற்றுக்கொண்டு நடத்தி வருகிறார்கள். இப்பொழுது அரசாங்கத்தில் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். சட்டசபை உறுப்பினர்களாக இருப்பவர்கள் இந்த நிலைமையை சமூக சேவை செய்வதற்காக பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். இந்த உத்திரவின்படி, சட்டசபை உறுப்பினர்கள், இந்த அனாதை இல்லங்களை நடத்தும் பொறுப்பை விட்டுவிட்டு, வேறு யாருக்காவது மாற்றிக் கொடுக்க வேண்டும். இத்தகைய நிலைமையினால் சட்டசபை உறுப்பினர்கள் சமூகத்திற்கு சேவை செய்து வருகிற தன்மையைத் தடுப்பதாகும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். சட்டசபை உறுப்பினர்கள் எப்போதுமே சட்டசபை உறுப்பினர்களாக இருப்பார்கள் என்பதில்லை. ஒரு சில ஆண்டுகளுக்குத்தான் இருப்பார்கள். ஆனால் சமூக சேவை எப்பொழுதுமே செய்யவேண்டியிருக்கும். ஆகவே சட்டசபை உறுப்பினர்களாய் இருந்தாலும் சரி, இந்த அனாதை இல்லங்களை நடத்தும் பொறுப்பை தடை செய்யக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்றைக்குப் பிற்பட்ட வகுப்பினருக்கும், ஹரிஜனங்களுக்கும் சம்பள கட்டணச் சலுகைகள் வழங்கப்படுகின்றன. அதற்குக் கல்வி விதி 92-வதின்படி ஏழ்மைச் சான்றுகள் வாங்கி வர வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. இன்றைக்கு பெரும்பாலானவர்களுக்கு 10-வது படிவம் வரையிலும் கல்விக் கட்டணச் சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. ரூபாய் 1,200-க்கு குறைந்த வருமானமுடையவர்கள் என்று அந்த ஊர் மணியகாரரிடமிருந்தோ அல்லது கணக்குப் பிள்ளையிடமிருந்தோ சேர்டிபிகேட் வாங்கி வரவேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். ஒரு ஊரிலே 100 மாணவர்கள் இருப்பார்களேயானால், குறைந்தது 80 அல்லது 90 மாணவர்களுக்கு இந்த சேர்டிபிகேட் வாங்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்த

8th April 1958] [Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

மதுரை, ராமனுதபுரம், திருநெல்வேலி முதலிய ஜில்லாக்களுக்கு 50,000 ரூபாய் வீதம் மத்திய சாப்பாட்டுக்கு ஹரிஜன் வெல்பேர் டிபார்ட் மெண்ட் ஒதுக்கியதாகவும், அந்தப் பணம் கொஞ்சம் கூட உபயோகப்படுத்தப் படவில்லை என்றும் தெரிகிறது. இது மிகவும் வருத்தப்பட வேண்டிய விஷயம். ஆகையால் மத்திய சாப்பாட்டிற்கு ஹரிஜன் வெல்பேர் டிபார்ட் மெண்ட் தொகையை ஒதுக்குவதற்குப் பதில் கல்வி இலாகா மூலமாகவே அதை உபயோகித்துக் கொள்ளலாம் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். அப்படிச் செய்வதால் ஒதுக்கப்பட்ட தொகையை நன்ருக உபயோகித்துக் கொள்ள முடியும் என்று நான் நினைக்கிறேன்.

ஆசிரியர்கள் தரத்தைப்பற்றி பேசப்பட்டது. இந்தச் சர்ச்சையில் நான் விழ விரும்பவில்லை. ஆரம்ப ஆசிரியர்களுக்குக் கிராமப் புறங்களில் வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் ஏற்படுத்திஞல் அநேக கிராமங்களில் பள்ளி கள் ஆரம்பிப்பதற்கும், இருக்கும் பள்ளிகள் முன்னேற்றம் அடைவதற்கும் ஹேதுவாக இருக்கும் என்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆதாரக் கல்வியைப்பற்றி நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எட்டாவது வகுப்பு வரையில் இதில் எந்தவிதமான சிக்கல்களும் இல்லை. 'போஸ்ட் பேஸிக் எஜுகேஷன்' திட்டம் இப்பொழுது வேகமாக அமலுக்கு வந்து கொண்டிருக்கிறது. இதில் 9,10,11 படிவங்கள் இருக்கின்றன. அதற்குப் பிறகு அவர்கள் எப்படி எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்கிற பிரச்னை இப்பொழுது எங்களுக்குக் கவலையை உண்டாக்கி இருக்கிறது. இப் பொழுது எஸ்.எஸ்.எல்.ஸி. முறையிருக்கிறது. 'டைவர்சிபைட் எஜு கேஷன்—மல்டி பர்பஸ் ஹைஸ்கூல்' இருக்கிறது. உத்திர ஆதாரக் கல்வி இருக்கிறது. இவற்றில் எல்லாம் படித்து வருவதற்கு எல்லா வகையிலே யும் சரியான பயிற்சி அளிக்கப்பட வேண்டும். இதில் ஒரு சரியான வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தால் ஒழிய கிராமப் புறங்களில் தொழிலும் கல்வியும் இணைந்த ஆதாரக் கல்வியின் எதிர்காலம் பிரகாசமாய் இருக் காது என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சில ஸ்தா பனங்களில் 2, 3 வருஷங்களாக 11-வது கிரேட் படித்த மாணவர்கள் வெளியே வருகிருர்கள். சில ஸ்தாபனங்களில் இந்த வருஷம் மாணவர் கள் படித்து வெளியே வரத் தொடங்கி இருக்கிருர்கள். எதிர்காலத்தில் இன்னும் அதிக மாணவர்கள் படித்து வெளியே வருவார்கள். அவர்களை 'யூனிவர்சிட்டி எஜுகேஷன்' பயில்வதற்கு அங்கீகாரம் கொடுப்பார்களா என்பது சரியாகத் தெரியவில்லை.

குழந்தைகளைப் பொறுத்த வரையில் படிப்பில் அதிக வித்தியாசம் இருப்பதில்லை. இரண்டு வருஷங்களுக்கு முன்பு எங்கள் ரூரல் இன்ஸ்டி டுடில் சேர்த்துக் கொள்ளப்பட்ட ஒரு பையன் வருஷப் பரிட்சையில் இரண் டாவதாகத் தேறிஞன். ஆகவே போஸ்ட் பேஸிக் பள்ளியில் இருந்து படித்துவரும் குழந்தைகளுக்கும், எஸ்.எஸ்.எல்.ஸி. மாணவர்களுக்கும் கல்லூரிகளில் படிக்க, பாலி டெக்னிகுகளில் படிக்க, பேஸிக் கிராமசேவா டிரைனிங்குகளுக்கு யூனிவர்சிட்டி வரையிலும் எல்லா வசதிகளும் செய்து கொடுத்தால்தான் பேஸிக் டிரைனிங் குறைந்த தரம் உள்ளதோ என்ற அச்சம் பெற்றோர்களுக்கு இருப்பதைச் சர்க்கார் போக்க முடியும். 12-50 p.m.

ஹைஸ்கூல்கள் சில இடங்களில் பெறுவாரியாக இருக்கிறது. மூன்று மைலில் அல்லது 4 மைலில் பள்ளிகள் இருக்கின்றன. ஆனல் சில இடங் களில் பல மைல் தூரத்திற்குக் கூட ஒரு ஹைஸ்கூல் கிடையாது. ஆகவே புதிதாகத் துவங்கும் பள்ளிகளாவது பிள்ளைகளுக்குச் சமீபத்தில் இருக்கு மாறு அமைக்க வேண்டியது அவசியம். பெற்றோர்களுக்கு பிள்ளைகளை ஹாஸ்டலில் சேர்த்துப் படிக்க வைக்கும் வசதி பெரும்பாலாகக் கிடையாது. அப்படிச் செய்தால்தான் பிற்போக்கான மக்களுக்குப் படிக்க வசதியேற்படும். இப்பொழுது பள்ளிக்கு பள்ளி ஒரு மைல் தூரம் இருக்க வேண்டும் என்கிருர்கள். ஐந்து வயது முதற்கொண்டு படிக்கும் சிறு குழந்தைகள் ஒரு மைல் குழந்தைகள் கூட எப்படி நடக்க முடியும். நம் வீட்டுக் குழந்தை நடப்பதானல் கால் வலிக்குமே என்று நாம் வருந்தவில்லையா. ஆகவே இடத்திற்கு தகுந்தாற்போல் இரண்டு பர்லாங் தூரமே ஆனலும் பள்ளிகளை ஏற்படுத்த அரசாங்கம் முன்வரவேண்டும்.

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran] [8th April 1958

ஆதாரக் கல்வியைப்பற்றி விஸ்தாரமாக சொல்ல வேண்டும் என்பது அவசியம் இல்லை. இதிலே நான் சொல்ல விரும்புவது, பெண்கள் சம்பந்தமான முதியோர் கல்வி திட்டத்தைப்பற்றி. இந்த முறையிலே வருபவர்கள் 18 அல்லது 20-வது வயதான அகதிகளும் விதவைகளும் புருஷனால் பணக் கஷ்டத்தாலோ குணக்கேட்டாலோ தள்ளப்பட்ட பெண்களும் ஆகும். இவர்களுக்கு பயிற்சி கொடுத்து ஈ.எஸ்.எல்.ஸி.-க்கு அனுப்புகிறோம். ஆனால் ஜூனியர் பேஸிக் படித்தவர்கள் ஹையர் கிரேட் பயிற்சிக்கு இடம் கொடுக்கப்படுவதில்லை. இவர்களுக்கு இந்த சலுகை கொடுக்கப்பட வேண்டியது அவசியம். இவர்கள் வயதானவர்கள். வாழ்க்கையில் நிறைய அனுபவம் உடையவர்கள். ஆகவே இவர்களுக்கு மருத்துவம் கிராம சேவிகா முதலிய பயிற்சிகள் கொடுக்க வசதி செய்து கொடுக்க வேண்டும் என்பதையும் நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அங்கஹீனமான, குருடர்கள், செவுட்டூமைகள் முதலிய இந்தக் குழந்தைகளுக்கு போதுமான பாதுகாப்போ, வாய்ப்போ கிடைக்கவில்லை. இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு சர்க்கார் தரப்பிலிருந்து டீச்சிங் கிராண்ட் என்று 3-ல் இரண்டு பங்குதான் கொடுக்கப்படுகிறது. இது எந்த நூற்றாண்டிலோ ஏற்பட்ட விதி. ஆகவே இதற்கு போதுமான அளவு போர்டிங் கிராண்டு, டீச்சிங் கிராண்ட் இவைகளைக் கொடுத்து எங்கெங்கு அங்கஹீனமான குழந்தைகள் இருக்கிறார்களோ அங்கங்கு பள்ளிகளை ஏற்படுத்த சர்க்கார் முன்வரவேண்டும். ஒரு ஊரிலுள்ள இப்பேர்ப்பட்ட குழந்தைகள் வெளியூர்களுக்கு சென்று கல்வி கற்க முடியாது. இந்த குழந்தைகளுக்கு தகுந்த கல்வித் திட்டமும் தொழில் திட்டமும் வகுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனது பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri N. MARUDACHALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த கல்வி மான்யத்தின்மீது சில விவரங்களை கூற விரும்புகிறேன். இந்த கல்வி விஷயத்தில் அஸ்திவாரமாக உள்ளவர்கள் உபாத்தியாயர்கள். இவர்களைப் பற்றி பல அங்கத்தினர்கள் கூறினார்கள். இவர்கள் நிம்மதியாக இருந்தால்தான் குழந்தைகளிடையே கல்வி அறிவு வளர முடியும். உபாத்தியாயர்களுக்கு நல்ல சம்பளம் கொடுத்தால்தான் அவர்கள் நிம்மதியாக இருந்து படிப்புச் சொல்லிக் கொடுக்க முடியும். இவர்கள் எந்த கட்சியையும் சேர்ந்தவர்கள் அல்ல.

ஆரம்ப பள்ளியிலே ஒரு உபாத்தியாயருக்கு 40 பிள்ளைகள் என்று கூறுகிறார்கள். நாற்பது குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பது முடியாத காரியம். ஒரு குடும்பத்திலே நான்கு குழந்தைகளை சமாளிப்பதே கஷ்டமான காரியம். அந்த ரீதியில் கல்வி அபிவிருத்தி அடைய வேண்டுமானால் ஆரம்பப் பள்ளியிலே ஒரு உபாத்தியாயருக்கு 25 குழந்தைகளுக்கு மேல் இல்லாமல் ஏற்பாடு செய்ய வேண்டும். மேலும் சிறு வகுப்புகளுக்கு பூராவும் பெண்களை உபாத்தியாயர்களாக இருக்க வேண்டும். இந்த பெண்களுக்கு எல்லா விதமான சலுகைகளும் கொடுக்கப்பட வேண்டும். கிராமங்களில் உபாத்தியாயர்களின் நிலை ரொம்ப மோசமாக இருக்கிறது. அவர்கள் ஏழ்மையான நிலையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு போதுமான சம்பளத்தை கொடுத்து அவர்கள் மன நிம்மதியோடு கல்வி வளர்ச்சிக்கு வேலை செய்ய வசதி செய்து கொடுக்க வேண்டும்.

1-00 p.m. அதோடுகூட ஹரிஜன ஆஸ்டல்கள் பல இடங்களில் நடைபெற்று வருகின்றன. அப்படிப்பட்ட சில ஆஸ்டல்களில் ஜாதி இந்துக்களைச் சேர்ந்தவர்கள் ஹரிஜனங்கள் என்று சொல்லிக் கொண்டு படித்து வருகிறார்கள். இப்படி பல இடங்களில் நடந்து கொண்டு வருகின்றன. இதை நான் நேரடியாகப் பார்த்திருக்கிறேன். இதிலிருந்தே அவர்கள் எவ்வளவு ஏழ்மையான நிலைமையில் இருக்கிறார்கள் என்பது தெரிய வரும். பல ஆஸ்டல்களில் படித்து வரும் எல்லா குழந்தைகளுக்கும் சாப்பாடு போடுவதில்லை. அவர்களுடைய ஏழ்மைத்தனத்தை இதன் மூலம் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. ஆகவே தாழ்த்தப்பட்டவர்களுக்கு எந்த எந்த சலுகைகள் காட்டப்படுகின்றனவோ அதே சலுகைகளை மற்ற ஏழைக் குழந்தைகளுக்கும் காட்ட வேண்டும். அப்படி இருந்தால்தான் இந் நாட்டில் இப்பொழுது நடைபெற்று வரும் ஆட்சி முறையில் குறை

சொல்லாமல் இருக்க முடியும். ஆகவே இந்த ஹரிஜன மானியத்திற்கு எவ்வளவு பணம் ஒதுக்கினாலும் போதாது. (பல குரல்கள் : இது கல்வி மானியம்.) கல்வி மானியத்திற்கு எவ்வளவு பணம் ஒதுக்கினாலும் போதாது. ஒதுக்கிய பணத்தை நல்ல முறையில் செலவழிப்பதற்கு வழி காண வேண்டும். நாட்டிற்கு நன்மை அளிக்கக்கூடிய முறையில் ஒதுக்கிய பணத்தை செலவழிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஆகவே உபாத்தியாயர்களைப்பற்றி நான் எவ்வளவோ சொல்லி இருக்கிறேன். ஸ்தல ஸ்தாபனங்களில் நடக்கும் சில பள்ளிக்கூடங்களுக்கு அரசாங்கம் மானியம் கொடுக்கிறது, சில ஸ்தல ஸ்தாபன பள்ளிக்கூடங்களுக்கு பணம் கொடுப்பதாக இல்லை. சில இடங்களில் மானியம் கொடுக்கப்படுவது 12,000 ரூபாய் என்றும் அதில் 6,000 ரூபாய் திருப்பி வாங்கிக் கொள்ளப்பட்டு விடுகிறது என்றும் சொல்லப்படுகிறது. அது சரியல்ல, சிங்கநல்லூர் பள்ளிக்கூடத்தை எடுத்துக் கொண்டால் அங்கே பஞ்சாயத்து போர்ட் பள்ளிக்கூடத்தை நடத்துகிறது. அங்கே சுமார் 40 ஆசிரியர்கள் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். அங்கே சுமார் 300 ஹரிஜனக் குழந்தைகள் படித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் குழந்தைகள் படிக்கும் இடம் சினிமா கொட்டகை மாதிரிதான் இருக்கிறது. ரூம் ரூமாக இல்லவே இல்லை. அப்படி ரூம் மாதிரி இல்லாமல் இருந்தால் எப்படி படிக்க முடியும் ? உபாத்தியாயர்கள் பிள்ளைகள் வரிசையாக உட்கார வைத்துப் படிப்புச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் ஒரு க்ளாஸில் சொல்லிக் கொடுப்பது மற்றொரு க்ளாசுக்கு கேட்பதால் பிள்ளைகள் சரியாக படிக்க முடியவில்லை. அங்கே 12,000 ரூபாய் கொடுக்கப்பட்டு 6,000 ரூபாய் திருப்பி வாங்கப்பட்டிருக்கிறது. இந்த நிலைமையில் பள்ளிக்கூடங்கள் சரிவர மானேஜ் பண்ண முடியாது. கொஞ்சம் பணத்தை அதிகமாகக் கொடுத்தால் பள்ளிக்கூடங்களை சரிவர நடத்தமுடியும், அதற்கு வேண்டிய சந்தர்ப்பமும் இருக்கும். இந்த நிலைமையில்தான் பஞ்சாயத்து போர்ட் பிரசிடெண்ட் சொல்லுகிறார். பல க்ளாசுகளில் மாறுபாடுகள் இருக்கின்றன. பல முறையில் பாடங்கள் போதிக்கப்பட்டு வருகின்றன. பல இடங்களில் பலவிதமாக நடைபெற்று வருகின்றன. வடவெள்ளி கிராமத்தில் தனிப்பட்டவருடைய மானேஜ்மெண்டில் பள்ளிக்கூடம் நடைபெற்று வருகிறது. அது வெங்கைய நாயுடுவால் நடத்தப்பட்டு வருகிறது. அங்கே நாலைந்து உபாத்தியாயர்கள் இருக்கிறார்கள். அங்கே ஆதாரக் கல்வி நடந்து கொண்டிருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தில் மூன்று நான்கு மாதங்களாக சம்பளம் கொடுப்பது இல்லை. மூன்று மாதங்கள் கழித்துதான் அவர்களுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது. இப்படி அவர்களுக்குச் சம்பளம் கொடுத்தால் அவர்களால் எப்படி தங்களுடைய வாழ்க்கையை நடத்த முடியும். அதனால் அவர்கள் சோளம், ராகி முதலியவைகளைப் பிள்ளைகளைக் கொண்டு வரச் சொல்லி ஜீவிக்க வேண்டியதாக இருக்கிறது. இந்த முறையில் கிராமங்களிலுள்ள உபாத்தியாயர்கள் தங்களுடைய ஜீவனத்தை நடத்திக்கொண்டு வருகிறார்கள். உபாத்தியாயர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தினால்தான் கல்வித் தரமும் உயர்வதற்கு வாய்ப்பு இருக்கும். நான் சொல்லியவைகளை ஒரு பிரசங்கமாக எடுத்துக் கொள்ளாமல் கனம் சுப்பிரமணியம் அவர்கள் இதை நேரடியாக பரிசீலனை செய்து பார்த்து அதற்கு ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

SRIMATHI C. KOLANTHAI AMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் கனம் மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கிற கல்வி மானிய கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். உண்மையாகவே நமது முதல் ஐந்தாண்டு திட்டத்திலும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நம்முடைய திட்டத்தின் ஐந்தில் ஒரு பங்கை கல்விக்கு என்று ஒதுக்கி இருப்பதற்கு ஆசிரியை என்ற முறையில் நான் என்னுடைய நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆரம்ப ஆசிரியர்களைப்பற்றி பல கட்சி அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். கனம் மந்திரி அவர்கள் ஏதோ நேற்று சொல்லும்போது ஆரம்ப ஆசிரியர்களுடைய பிரச்னையைத் தீர்ப்பதற்கு எதிர்க் கட்சியினருடைய ஒத்துழைப்பை நாடினால் மட்டும் அவர்களுடைய பிரச்னை

[Srimathi C. Kolanthai Ammal] [8th April 1958

தீர்ந்து விடாது என்று கருதுவது போல் குறிப்பிட்டார். ஆனால் அதிலும் ஒரு உண்மை இருக்கிறது. எதிர்க் கட்சிக்காரர்களை மட்டும் நாடினால் அவர்களுடைய பிரச்னைகள் தீர்ந்து விடாது. நேற்று நான் சொன்னேன். "நீங்கள் எதிர்க் கட்சிக்காரர்களை நாடாமல் நீங்களாகவே ஆறு அல்லது ஏழு பேர்கள் சேர்ந்து கொண்டு மந்திரியினுடைய அரையில் போய் அவரைக் கண்டு உங்களுடைய குறைகளைச் சொல்லிக் கொள்ளுங்கள்" என்று சொன்னேன். அதற்கு அவர்கள் மறுத்துவிட்டார்கள். நான் இருந்த அந்தக் கூட்டத்தில் பேசுவதற்கும் மறுத்து விட்டார்கள். அவர்கள் கருதுவதெல்லாம் ஏதோ எதிர்க்கட்சிக்காரர்களுக்குத்தான் அவர்களுடைய குறைகள் எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு இருக்கிறது, மற்றவர்களுக்கு இல்லை என்ற மனப்பான்மையில் இவர்கள் இருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அப்படிப்பட்ட மனப்பான்மை அவர்களுக்கு அமைந்து போன காரணத்தால் தான் அந்தக் கூட்டத்தில் கூட என்னைக் கலந்து கொள்வதற்கு மறுத்து விட்டார்கள். ஆனால் அவர்கள் எப்படி நடந்துகொண்ட போதிலும் ஆரம்ப ஆசிரியர்களுடைய உரிமையை மனதில் எண்ணிக் கொண்டு எந்த வழியிலாவது அவர்களுடைய பிரச்னைகள் தீர்ந்தால் போதும் என்று நான் கருதுகிறேன். மாற்றுக் கட்சிக்காரர்களுடன் சேர்ந்து அவர்களுடைய கட்சிக்கு ஆதரவு கொடுக்கிற முறையில் ஆசிரியர்கள் இருக்கக் கூடாது என்பதை மட்டும் அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆசிரியர்களுடைய குறைகளைப் போக்குவதற்கு அவர்கள் கட்சிக் கூட்டங்களுக்கு போகக் கூடாது என்பதை ஆசிரியர்களுக்கு நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன். மேலும் எதிர் கட்சிக்காரர்கள் தங்களுடைய கட்சி பிரசாரத்திற்கு ஆரம்ப ஆசிரியர்களுடைய பிரச்னைகளை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள், அதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்றும் அவர்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆரம்ப ஆசிரியர்களுடைய நிலை இன்று ரொம்பவும் கடுமையான நிலையில் இருக்கிறது. அதிலும் சென்னை மாகாணத்திலிருக்கக்கூடிய ஆரம்ப ஆசிரியர்களுடைய நிலை மிகவும் குறைவாக இருக்கிறது. அவர்களுக்கு வீட்டு வசதி மிகவும் குறைவாக இருக்கிறது. அவர்களுக்கு வீடுகளைக் கட்டிக் கொடுப்பதற்கு திட்டம் ஒதுக்க வேண்டும். ஆகவே ஆரம்ப ஆசிரியர்களுக்கு நல்ல முறையில் வீடுகள் கட்டும் திட்டம் ஒதுக்கப்பட வேண்டும் என்பதை இந்த இடத்தில் நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அவர்களைப்பற்றி எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் எப்படி பெருமை அடித்துக்கொள்ளுகிறார்களோ, அவர்கள் பேரில் எவ்வளவு அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லுகிறார்களோ அந்த அளவில் அவர்கள் பேரில் எங்களுக்கும் அனுதாபம் உண்டு என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். "எழுத்தறிவித்தவன் இறைவனாவான்" என்ற முறைப்படி அவர்கள் பேரில் எங்களுக்கும் அனுதாபம் உண்டு என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக தமிழை வளர்ப்பதற்கு தாங்கள் அக்கறை கொண்டிருக்கிறோம் என்றும், அதற்கு ஏற்றவாறு தமிழைச் சார்ந்த தோழர்கள் 15 பேர்கள் தமிழுக்கு தூண்களாக இருக்கிறோம் என்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் அப்படிச் சொல்லிக் கொண்டு எதிர்க்கட்சியிலுள்ள தோழர்கள் சிலர் இந்தச் சட்டசபையில் பேசுகிற காலத்தில் சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதை என்னால் எடுத்துக் காட்ட முடியும். அவர்கள் தமிழ் படித்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் நேரத்தில் அவர்கள் "இதரர்கள்," என்றெல்லாம் சொல்லி வருகிறார்கள். உயர்திணை உபயோகப்படுத்தும் பொழுதெல்லாம் அவர்கள் அஃறிணையை உபயோகப் படுத்துகிறார்கள். இதைத் தவிர அவர்கள் பேசும்போது "நான் ஒன்று சொல்வேன்" என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அதாவது நிகழ் காலத்தைக் குறிப்பிடும்போது எதிர்க்கட்சிக்காரர்கள் எதிர் காலத்தைக் குறிப்பிட்டு பேசுகிறார்கள். நிகழ் காலத்தைக் குறிப்பிட்டு பேசுவது கிடையாது. இந்த முறையில் அவர்களுடைய இலக்கணம் இருக்கிறது. அந்த முறையில்தான் அவர்களுடைய தமிழ் தொண்டு இருக்கிறது. இலக்கிய முறையில் நாங்கள் புத்தகங்களை எழுதுகிறோம் என்றும் சொல்லுகிறார்கள். நல்ல இலக்கிய முறையில் எழுதுவதற்கு ஆர்வம் வேண்டும், அதெல்லாம் இருக்கிறது

8th April 1958] [Srimathi C. Kolanthai Ammal]

என்று சொல்லுகிருர்கள். இப்படியெல்லாம் சொல்லுகிறவர்கள் தமிழ் நடையில் எழுதுவதைப் பார்த்தால் நன்ருகத் தெரிய வரும். இந்த நிலேயில் கனம் கோவிந்தசாமி நாங்கள் எழுதும் நூல்களைக் கொடுக்கிரும், அதைப் பாருங்கள் என்று சொல்லுகிருர்கள். நாங்கள் எழுதும் நூல்களைக் கொடுக்கிருேம் அதையும் அவர்கள் பார்த்துக் கொள்ளட்டும் என்று நாங்கள் சொல்லுகிருேம். அவர்கள் எந்த முறையில் தமிழ் ஓசையை வளர்க்கிருர்கள் என்பதையும் பார்க்கவேண்டும். அவர்கள் முத்தமிழைப்பற்றி பேசுகிருர்கள். தாமாஷா வரியைப்பற்றி பேசும்போது அவர்கள் என்ன சொன்ருர்கள் என்ருல், அவர்கள் ஈடுபட்ட பிறகுதான் உயர்ந்த நிலேயில் தமிழ் வளர்ந்து இருக்கிறது என்று பெருமை அடித்துக் கொண்டார்கள். அவர்களுடைய நாடகத் தமிழுக்கும் இன்று இருக்கும் சினிமாத்துறை தமிழுக்கும் வேறுபாடு உண்டு என்பதை அவர்கள் உணர வேண்டும். இன்னும் அவர்கள் நல்ல தமிழை வளர்க்கிருேம் என்றும் சொல்லிக் கொள்ளுகிருர்கள். ஏதோ ரீங்காரமாக அடுக்கு மொழிகளில் பேசி விடுகிருர்களே தவிர வேறு ஒன்றும் இல்லை. இப்படி மாணவக் கூட்டங்களில் பேசி விடுகிருர்களே தவிர . . . .

**Sri K. ANBAZHAGAN : On a point of order** இந்த மன்றத்தில் அங்கத்தினர்கள் பேசுகிற காலத்தில் மற்ற அங்கத்தினர்களைப் பார்த்து " நீங்கள், நாங்கள் " என்றெல்லாம் நேரடியாகப் பேசுவது போல் பேசுகிருர்கள். அப்படி குறிப்பிட்டு பேசுவது அவையினுடைய முறைக்கு உகந்தது அல்ல. இப்படியே கனம் அங்கத்தினர் தொடர்ந்து பேசிக்கொண்டு வருகிருர். ஆகவே இம்மாதிரி பேசும் முறையை மாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member need not address as ' நீங்கள் ' as it will refer only to the chair.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : எதிர்க் கட்சியிலும் இப்படியே தவறு செய்து கொண்டிருக்கிருர்கள். இம்மாதிரியே எதிர்க் கட்சியிலும் உள்ளவர்கள் பேசாமல் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**DEPUTY SPEAKER** : இதைப்பற்றி நீங்கள் அப்பொழுது கேட்டிருக்கவேண்டும். இப்பொழுது கேட்பதில் பிரயோசனம் இல்லை.

**Sri K. ANBAZHAGAN** rose. . .

DEPUTY SPEAKER : Let the hon. Member Srimathi Kolanthai Ammal continue her speech. Probably, she is not aware of the procedure.

**Srimathi C. KOLANTHAI AMMAL** : இந்த முறையில் இசைத் தமிழ், நாடகத் தமிழ் வளரும்படியான பொறுப்பு எங்களையே சாரும் என்று **1-10 p.m.**
**நீங்கள்** (சிரிப்பு)—அவர்கள் இறுமாப்போடு இருக்கக்கூடாது. சட்டசபை அங்கத்தினர்களாகிய 205 பேர்களையும் அது சாரும் என்பதை ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

தமிழ் ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் நேற்று டைரக்டர் அவர்களிடம் நான் சொன்னேன். கிரேடு 1, கிரேடு 2 என்று சொல்லக்கூடிய ஆசிரியர்களைப் பற்றி எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர்கள் விரிவாகக் கூறினுர்கள். பி.ஓ.எல். (ஹானர்ஸ்) பட்டம் பெற்றவர்கள், தமிழில் எம்.ஏ. பட்டம் பெற்றவர்கள், கிரேடு 1, கிரேடு 2 என்ற பகுதியிலே இருக்கக்கூடிய ஆசிரியர்கள் குறைந்த சம்பளம் பெற்று வருகிருர்கள். அந்த நிலை மாறி, ஒரே மாதிரியாகத் தமிழ் ஆசிரியர்களுக்கு நியாயமான, வேலைக்குத் தகுந்த ஊதியம் கொடுக்க வேண்டும். எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்துவிட்டு, நான்கு ஆண்டு வித்வான் வகுப்பில் படித்துவிட்டு, அதற்குப் பிறகு ஓராண்டு பயிற்சி பெற்று, ஆக ஐந்தாண்டு படித்து பட்டம் பெற்றவர்களுக்கு, அதிலும் சிறப்பாகத் தமிழ் துறையிலே பத்துப்

[Srimathi C. Kolanthai Ammal] [8th April 1958

பன்னிரண்டு ஆண்டுகள் ஆசிரியராக இருந்து அனுபவம் பெற்ற பிறகும் கூட, பேராசிரியர் என்ற பட்டம் கொடுக்க மறுக்கிறார்கள். ஐந்தாண்டு சர்விஸ் பெற்ற பி.ஓ.எல். (ஹானர்ஸ்) பட்டதாரிகளுக்கு, அவர்களுடைய இலக்கிய இலக்கண அறிவு குறைவாக இருந்தபோதிலும் கூட, பேராசிரியர் என்ற பட்டம் கொடுக்கப்படுகிறது. ஆகவே, இந்த வேறுபாடு ஆசிரியர் களுடைய தகுதிக்கு மிகவும் குறைபாடாக இருக்கிறதென்பதையும் நான் இந்த இடத்திலே ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, பிரி-யுனிவர்ஸிடி மாணவர்களுக்கு பாடத் தொகை அதிகமாக இருப்பதாகக் குறிப்பிட்டார்கள். ஆனால் தமிழ் பாடம் குறைவு என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். எஸ்,எஸ்.எல்.ஸி. வரைக்கும் படித்த பல மாணவர்கள், சிறப்புத் தமிழ், பொதுத் தமிழ் என்ற இரண்டு வகைப்பட்ட அளவுக்குத் தமிழைப் படித்த மாணவர்கள், பிரி-யூனி வர்ஸிடி வகுப்பில் குறுகிய பாடத் திட்டங்களை படிக்கிறார்கள். அது தமிழின் முன்னேற்றத்திற்கும் தமிழின் இயக்கத்திற்கும் உதவி செய்வ தாகாது. பிரி-யுனிவர்ஸிடி வகுப்பில், தமிழில் அதிகமாக இலக்கிய இலக்கணப் பாடங்களை வைக்கவேண்டும்.

மானேஜ்மெண்டார் நடத்தும் பள்ளிகளில் நூல் நிலையங்களுக்கு 30 சத விகிதம் நூல் வாங்குவதற்கு அனுமதி அளிக்கப்படுகிறது. ஆனால், பஞ்சாயத்துக்கள், ஜில்லா போர்டுகளால் நடத்தப்படும் பாடசாலைகளுக்கு அம்மாதிரி நூல் நிலையங்களுக்கு நூல் வாங்குவதற்கு அனுமதி கொடுப்ப தில்லை. அதை அரசாங்கம் கவனித்து அந்த பள்ளிக்கூடங்களும் எல்லா பாட திட்டங்களையும் வெற்றி பெறச் செய்வதற்குரிய நூல்களை, நூல் நிலையங்களுக்கு வாங்கும்படியான ஒரு சிறந்த நிலைமையை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, நெசவாளர்கள் முதலிய தொழிலாளர்களுக்கு வீட்டு வசதித் திட்டமானது சட்டத்திலே சேர்ந்திருப்பது போல, சிறப்பாக அதிலும் ஆரம்ப ஆசிரியர்களுக்கு வீட்டு வசதித் திட்டம் சட்டத்திலேயே சேர்ந்திருக்க வேண்டும் என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

10, 12, நூற்றாண்டுகளிலே எழுதப்பட்ட கல்வெட்டுகளிலே, குறிப்பாக கோவில்களில் எல்லாம் இருக்கும் கல்வெட்டுகளிலே, மான்யங்கள் ஒதுக்கப் படும்பொழுது கலை வளர்ச்சிக்கென்று ஒரு குறிப்பிட்ட பகுதி ஒதுக்கப் பட்டிருப்பது போல, இன்று நமது பெரிய மடங்கள் தருமபுரம் ஆதீனம், திருவாடுதுறை ஆதீனம் போன்ற மடங்கள் ஏராளமான சொத்தை கல்விக் காக, சிறப்பாக தமிழ் கல்விக்காக, பயன்படுத்தி வருகிறார்கள். அந்த முறையில் ஆசிரியர்களுக்கு உதவித் தொகை அளிக்கவேண்டுமானால், அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற்று நிச்சயமாக ஆசிரியர்களுடைய வறு மையை நீக்குவதற்கு ஏதாவது பெரும் முயற்சி செய்யவேண்டுமென்று, பணிவன்போடு ஆசிரியர் என்ற முறையில் கேட்டுக் கொள்கிறேன்.

மாணவர்களுடைய கல்வித் தரம் உயருவதற்கு அடிப்படையிலே ஒரு திருத்தம் வேண்டும் என்பதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். முற் காலத்தில் மாணவர்கள் குருகுல முறை மூலம் கல்வி பயின்றார்கள். “இரு என இருந்து சொல் எனச் சொல்லி பருகவ நன்ன ஆர்வத்தனுகி செவி வாயாக” மாணவர்கள் படித்தார்கள். இப்பொழுதுள்ள நிலைமை யைப் பார்க்கும்பொழுது 100-க்கு 25 மாணவர்கள் தான் அந்தத் துறை யிலே இருக்கிறார்கள். ஆகவே, இன்று மாணவர் இரு என ஆசிரியர் இருக்கிற நிலை வந்துவிட்டது. கல்வியின் தரம் உயரவேண்டுமென்று சொன்னால், மாணவர்களுக்கு எந்தவிதமான கட்சி மனப்பான்மையும் இல்லாதபடி, நன்றாக படிக்கவேண்டுமென்ற ஒரு மனப்பான்மையை அவர் களிடையே வளர்ப்பதற்கு, எந்த முறையிலாவது சட்ட திட்டங்களை வகுக்க வேண்டுமென்று கூறிக்கொள்ளுகிறேன். அதிலும் சிறப்பாக அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் இத்தகைய ஒரு நிகழ்ச்சி நடந்தது என்று சொன்னால் நாம் எல்லோரும் வருத்தப்படவேண்டியதாக இருக்கிறது. என்னுடைய பல்கலைக் கழகம் என்ற முறையில், அந்தப் பல்கலைக் கழகத்தில் பல் வேறு குறைபாடுகள் நடைபெறுகின்றன என்று சொன்னால், அந்தப்

8th April 1958] [Srimathi C. Kolanthai Ammal]

பல்கலைக் கழகம் இயங்குவதற்கு எத்தனை கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவழிக்கப்பட்டு வருகிறது என்பதை மாணவர்கள் உணரவேண்டுமென் பதைத்தான் இந்த இடத்திலே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மாணவர் கள்தான் நம்முடைய நாட்டிலே வருங்காலத்தில் சிறந்த தனிப் பெரும் மன்னர்களாக திகழக்கூடும், அவர்களைத்தான் நாம் நம்பியிருக்கிறோம் என்ற ரீதியிலே, மாணவர்களின் கல்வித் தரம் உயர்வதற்கான படிப்பை அவர்கள் படிப்பதற்கு ஏற்ற வழிவகைகளையெல்லாம் செய்யவேண்டும். அதற்குரிய திட்டங்கள் வகுப்பதற்கு அமைச்சர் அவர்கள் முன் வர வேண்டுமென்று கூறிக்கொண்டு, இந்த மான்யத்தை ஆதரித்து என்னு டைய கருத்துகளை தெரிவிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் அளித்ததற்காக என் நன்றியை உதவி சபாநாயகர் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளு கிறேன்.

**SRI T. KARIA GOUNDER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் கல்வி மான்யத்தை கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருப்பதை ஆதரித்து சில வார்த்தைகள் நான் பேச விரும்புகிறேன். நான் மாலையிலே பேசலாம் என்று நினைத்தேன். உதவி சபா நாயகர் அவர்கள் இப்பொழுதே பேசுவதற்கு சந்தர்ப்பம் கொடுத்ததற்காக நான் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். எனக்கு முன் பேசிய எல்லா நண்பர்களும் இந்த மான்யத்தைப் பற்றி புகழ்ந்தும், ஆதரித்தும் பேசினார்கள். சிலர் நேராக கல்வி அமைச்சர் அவர்களை தாக்கிப் பேசினார் கள். நான் கல்வி மான்யத்தைப் பற்றி பின்னால் பேசலாம் என்று எண்ணுகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்களையும், உள்நாட்டு இலாகா அமைச்சர் அவர்களையும் எதிர்க் கட்சியிலிருந்து பேசிய நண்பர்கள் தாக்கிப் பேசினார்கள். எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். அண்ணாமலை யுனி வர்ஸிடியானது உலகத்திலேயே தனிப்பட்ட மனிதனின் பெயரால் நடத்தப் படுகின்ற யுனிவர்ஸிடி என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். பல யுனிவர்ஸிடிகள் உலகத்திலே உள்ளன. குறிப்பாக நான் சொல்ல வேண்டுமானால், நம் நாட்டிலே தனிப்பட்டவர் பெயரால் நடக்கும் யுனிவர் ஸிடியை ஆரம்ப காலத்திலிருந்து பீடித்திருந்த அந்த நோயானது, மாணவர்கள் உள்ளத்திலேயும் இருக்கிற நோய் என்பதை, குறிப்பாக நான் இந்த இடத்திலே சொல்ல வேண்டுமானால் எல்லா பிராமணரல்லாத சகோதரர்களும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். குறிப்பாக, அண்ணாமலை யுனிவர்ஸிடியில், நீண்ட நாட்களாக பிள்ளைகள் மனதில் உள்ள இந்த நோயானது வளர்ந்து, கடைசியிலே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையே மூடவேண்டிய நிலைமைக்கு வந்துவிட்டது பற்றி எல்லோரும் வருந்தவேண்டிய நிலையில் இருக்கிறோம். ஆறு அறிவு படைத்த மனித னாகப் பிறந்த எல்லோரும் வருந்தத்தக்க விஷயம்தான் இது. நிதி அமைச்சர் அவர்கள் பொறுப்பற்ற முறையில் அன்றைய தினம் அண்ணா மலை நகரத்தில் நடந்துகொண்டார்கள் என்று எதிர்க்கட்சியினர் நாக்கில் நரம்பில்லாமல் பேசியது குறித்து நான் பெரிதும் வருந்துகிறேன்.

**DEPUTY SPEAKER : The Hon. Member should not use those words " நாக்கில் நரம்பில்லாமல் ". He should use only soft and mild words.**

**SRI P. S. CHINNADURAI :** கனம் அங்கத்தினருக்கு நாக்கில் நரம்பு இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**SRI T. KARIA GOUNDER :** பிராமணரல்லாத சமூகம் முன்னேற வேண்டும் என்பதற்காக அதை ஆதரித்து வந்த தலைவர்கள் என்ன செய் தார்கள் என்பதையும், தலை நிமிர்ந்து நாமும் மனிதர்கள் என்று பேசக்கூடிய உயர்வு பெற பிராமணரல்லாத சமூகத்திற்கு எவ்வளவு நாளாகும் என்பதையும் ஒவ்வொரு நண்பரும் மனதில் கைவைத்து பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மீண்டும் நாம் கீழ் நிலைக்கு போக ஆரம்பித்துவிட்டோம். மாணவர் உள்ளத்திலே விஷம் ஊட்டப்படும் நிலையை பார்க்கிறோம். ஒருக்கால் சென்னை நகரத்திலுள்ள பிராமணரல்லாத மாணவர்கள் நன்றாக படிக்கிறார்களோ, என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் சென்னையை விட்டு, மற்ற நகரங்களிலே படிக்கும் மாணவர்கள் பத்தாவது வகுப்பு வரையிலும், ஸ்கூல் பைனல் வரையிலும் படித்துவிட்டு, அல்லது ஒரு சிலர் " இண்டர்மீடியட் " வரையிலும்

1-20 p.m. படித்துவிட்டு, அதற்கு மேல் படிக்காதவர்களே நூற்றுக்கு நூறு இருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அண்ணாமலை பல்கலைக் கழக சம்பவத்தைப் பொறுத்த வரையில் கனம் நிதி மந்திரி செய்தது தவறு என்று சொல்லப்பட்டது. அவர் தவறு செய்யவே இல்லை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு மானியம் கொடுப்பதற்கும் அதற்கு யோசனை சொல்வதற்கும் கனம் மந்திரிக்கு அதிகாரம் இருக்கிறது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு உத்திரவு போடுவதற்கு கனம் மந்திரிக்கு அதிகாரம் இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். பிரஸ்தாப சம்பவத்தின்போது அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்கள் கனம் மந்திரியின் காரின் மீது கற்களை எறிந்தார்களாம். எதிர்க் கட்சி அங்கத்தினர்கள், காரின் மீது மாணவர்கள் கற்களை எறிந்ததற்குக் காரணம் என்ன என்பதைத் சொல்லாமல், பொறுப்பற்ற முறையில் வேறு என்னவெல்லாமோ சொல்கிறார்கள். வேலூரில் கனம் மந்திரி பேசியது பற்றி குறிப்பிடப்பட்டது. அந்தக் கூட்டத்தில் மந்திரியுடன் நானும் இருந்தேன். பத்திரிகைகளில் வந்திருக்கும் செய்திகளை நம்பக்கூடாது. பத்திரிகைக்காரர்கள், இல்லாததையெல்லாம் எழுதுகிறார்கள். அந்தக் கூட்டத்தில் கனம் மந்திரி மனம் நொந்து பேசினார். "இந்த சமூகம் இப்படி அழிந்து போகிறதே!" என்று சொல்லி அக்கூட்டத்தில் தம் பேச்சை அவர் முடித்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழக சம்பவம் சம்பந்தமாக அங்கே அவர் வேறுவிதமான அபிப்பிராயம் எதுவும் தெரிவிக்கவில்லை. இந்த வார்த்தையை அவர் அங்கே மனம் நொந்து சொன்னார்.

சமீபத்தில் சென்னையில் நடந்த சம்பவம் என்ன என்று நாம் பார்க்க வேண்டும். சென்னையில் சிலர் சர்க்கார் பஸ்களுக்கு பெட்ரோலால் தீ யிட்டுக் கொளுத்தினார்கள் என்று பத்திரிகைகளில் செய்தி வந்தது. பள்ளிசெல்லும் மாணவர்கள்தான் இந்தக் காரியத்தைச் செய்தார்கள் என்று எல்லோரும் சொன்னார்கள். பிராமணரல்லாதார் சமூகம் வளர வேண்டுமென்று சொல்லும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் இம் மாதிரி நடந்துகொண்டேயிருந்தால், இந்தச் சமூகம் முன்னேறுவதற்கு இன்னும் நூறு வருஷங்கள் ஆகும் என்று சொல்ல விரும்புகிறேன். காரணம் என்ன? இப்போது, ஹிந்தி வேண்டாம் என்று திராவிட முன்னேற்றக் கழகத்தினர் சொல்லுகிறார்கள். ஏராளமான பிராமணர்கள் ஹிந்தி படித்திருக்கிறார்கள். ஹிந்தியே ஒருவேளை ஆட்சிமொழியாக வந்துவிட்டால், அப்போது பிராமணரல்லாத சமூகத்தினர்தான் கஷ்டப்படுவார்கள் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். பிராமணர்கள்பால் பொறாமை கொள்ளக் கூடாது. அவர்களைப் போல் நாமும் முன்னேறப் பார்க்க வேண்டும். குறிப்பாக தி.மு.க. அங்கத்தினர்கள் தான் பிராமணரல்லாத சமூகத்திற்கு பாதகம் செய்கிறார்கள். தி.மு.க. அங்கத்தினர்கள் தான் பொறுப்பற்ற முறையில் பேசுகிறார்கள். அவர்கள் அவ்வாறு பேசக்கூடாது. எல்லோருக்கும் சுயமரியாதை உணர்ச்சி இருக்கும்போது கனம் மந்திரிகள் பொறுப்பற்ற முறையில் நடந்துகொண்டார்கள் என்று சொல்வது தவறு.

லட்சக்கணக்கான தமிழர்கள், தமிழர்கள் என்று கூறித் தலை நிமிர்ந்து நடக்கவேண்டும். அதற்கான காரியத்தைச் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடன், ஒரு கோடி ரூபாய்க்கு மேல் செலவழித்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார் அமைத்தார். தமிழ் இசைக் கலையை அபிவிருத்தி செய்வதற்கும் அங்கே ஏற்பாடு செய்தார். தமிழர்கள் எஞ்ஜினியரிங் கல்வியைப் பெறுவதற்காக அங்கே எஞ்ஜினியரிங் கல்லூரியையும் அமைத்தார். அந்த எஞ்ஜினியரிங் கல்லூரி மாணவர்களும் பிரஸ்தாப சம்பவத்தில் ஈடுபட்டார்கள். இரண்டு நாட்களுக்கு முன்பு அந்த எஞ்ஜினியரிங் கல்லூரியின் ப்ரின்சிபாலையும் ஆசிரியர்களையும் கண்டேன். அந்தப் பிரின்சிபால் "இப்போதாகிலும் மாணவர்கள் குறைகளை அமைச்சரிடம் சொல்லட்டுமே! அமைச்சர் அதை நிவர்த்தி செய்வாரே!" என்று சொன்னார். அந்தப் பல்கலைக் கழக மாணவர்கள் அண்ணாமலைச் செட்டியாரின் சிலையை அழிக்க முற்பட்டார்கள். இதைவிட நன்றிகெட்ட தன்மை வேறு என்ன இருக்கமுடியும்? தமிழ் நாட்டு மாணவர்கள்

8th April 1958] [Sri T. Karia Gounder]

இவ்வாறு செய்தால், தமிழர்களின் பண்பு, கலாசாரம், கண்ணியம் முதலியவை என்ன ஆவது ? தமிழர்கள் படித்து முன்னுக்கு வரவேண்டுமென்ற நோக்கத்துடன் ஸ்ரீ அண்ணுமலை செட்டியார் அந்தப் பல்கலைக் கழகத்தை அமைத்தார். அந்தப் பல்கலைக்கழக மாணவர்கள் இப்படியா நடந்துகொள்வது ? மாணவர்கள் திருந்தும் வரையில் பல்கலைக் கழகத்தை திறக்க வேண்டாமென்றும் இன்னும் இரண்டு வருஷங்களுக்கு பல்கலைக் கழகத்தை மூடிவைக்க வேண்டுமென்றும்கூட ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்களுக்கு நான் யோசனை கூற விரும்புகிறேன். இந்த விஷயத்தில் கனம் அமைச்சர் அவர்கள் தலையிடுவாராஞல் தலையிடவேண்டாமென்று கூட அவரை நான் மன்ருடிக் கேட்டுக்கொள்வேன். படிக்கும் பையன்கள் படிப்பை விட்டுவிட்டு திராவிட முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்து, ரெயில்வே பிளாட்பாரங்களிலும், நடுத் தெருவிலும் நிர்க்கதியாக அலைவதைப் பார்க்கும் எந்தத் தமிழனும் வருந்தாமல் இருக்கமுடியாது.

கல்விக்காக கனம் நிதி அமைச்சர் செய்திருக்கும் சேவையை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. கல்விக்காக 12 கோடி ரூபாய் செலவழிக்க முன்வந்திருக்கும் கனம் அமைச்சரை நான் பாராட்டுகிறேன். எனக்கு $1\frac{1}{2}$ நிமிஷம் அதிகமாகக் கொடுத்ததற்காக தங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, உலகத்திலேயே தனிப்பட்டோரால் நடத்தப்படும் பல்கலைக் கழகம் அண்ணுமலைப் பல்கலைக்கழகம் ஒன்றுதான் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ கரிய கௌண்டர் கூறினர். அது வாஸ்தவமா என்று அறிய விரும்புகிறேன்.

**DEPUTY SPEAKER :** அது கனம் அங்கத்தினர் ஸ்ரீ கரிய கௌண்டர் அவர்களுடைய அபிப்பிராயம்.

**Sri P. S. ELLAPPAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சச்சரவு நிறைந்த கட்டத்தில் என்னைக் கொண்டு வந்து விட்டுவிட்டீர்கள். (சிரிப்பு). இப்போது நடக்கும் விவாதத்தைப் பார்த்தால் நாம் எல்லோரும் தமிழ் நாட்டில் இருக்கிறேமா, அல்லது வேறு எங்கிருந்தாவது இங்கே வந்துவிட்டோமா என்று தோன்றுகிறது.

எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் ஏதாவது சொன்னுல், " சுயநலக் கண்ணேட்டத்துடன் அவர்கள் அவ்வாறு சொல்லுகிருர்கள் " என்று ஆளும் கட்சி அங்கத்தினர்கள் சொல்கிருர்கள். எதிர்க் கட்சியில் இருக்கும் நான் பேசும் விஷயங்களைப்பற்றியும் அவர்கள் அப்படிச் சொல்வார்களோ என்ற பயம் எனக்கு இருக்கிறது. நான் சுயநலக் கண்ணேட்டத்துடன் எதையும் சொல்லமாட்டேன்.

ஆசிரியர்களின் பிரச்னைகளைப்பற்றி எல்லோரும் பேசினர்கள். " வயிற்று பிள்ளையை நம்பி மாடுமேய்க்கும் பிள்ளைகளைக் காலை வாரிவிட்டாளும் " என்று ஒரு கதை உண்டு. மாடுமேய்க்கும் பிள்ளைகள் இருந்த நிலைமையில் தான் இன்று ஆசிரியர்கள் இருக்கிருர்கள். என்னைப் பெரிய படிப்பாளியாகவோ, ஞானியாகவோ யாரும் கருதவேண்டாம். கனம் நிதி அமைச்சருக்கு, மற்றெல்லோருக்கும் தெரிந்திருப்பதைவிட நன்ருக எல்லா விஷயங்களும் தெரியும். அவரால் கொண்டுவரப்படும் எல்லா பட்ஜெட்டுகளும், எவ்வளவு விவாதங்களுக்கு உட்படுத்தப்பட்டாலும் கடைசியில் சுமுகமாக நிறைவேறிவிடும். முருகன் கொண்டுவரும் பட்ஜெட்களின் முடிவுகள் எல்லாம் சுமுகமாக இருக்கும். (சிரிப்பு). பட்ஜெட்டின் மீது நடக்கும் விவாதம் முதலில் சூடாக இருக்கும், கடைசியில் ஆறிவிடும். இருந்தாலும் நானும் இரண்டு வார்த்தைகள் பேச வேண்டுமென்பதற்காகப் பேசுகிறேன்.

இரண்டு பர்லாங்குகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீதம் பள்ளிக்கூடங்களை அமைக்க வேண்டுமென்று ஸ்ரீமதி சௌந்தரம் அம்மையார் கூறினர். அப்படி இருந்தால் தான் சிறிய குழந்தைகள் பள்ளிக்கூடங்களுக்குப் போகமுடியும் என்று அவர் கூறினர். நான் சொல்கிறேன் : 5 மைல்களுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீதமாவது பள்ளிக்கூடங்களை அமைக்க

[Sri P. S. Ellappan] [8th April 1958

வேண்டும். இப்போது கல்விக்காக எவ்வளவோ பணம் செலவழிப்பதாக சர்க்கார் சொல்கிருர்கள். ஆனல், கிராமங்களில் 10 மைல்களுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீதம் கூட பள்ளிக்கூடங்கள் இல்லே. இருக்கும் பள்ளிக் கூடங்கள் பல வகைப்பட்டவையாக இருக்கின்றன. சில பள்ளிக்கூடங்கள் ஜில்லா போர்டுகளால் நடத்தப்படுகின்றன. சில பள்ளிக்கூடங்கள் ஹரிஜன நல இலாகாவால் நடத்தப்படுகின்றன. இந்தப் பள்ளிக்கூடங்களில் கட்டிட வசதி இல்லே ; வகுப்பு அறைகளில் பகலில் வெயிலும் இரவில் நிலாவும் வெளிச்சம் கொடுக்கும். இந்தப் பள்ளிக்கூடங்களையெல்லாம் ஒரே வகைப் பட்டனவாக ஆக்கவேண்டும் ; அதாவது எல்லாவற்றையும் ஜில்லாபோர்டு பள்ளிக்கூடங்களாக ஆக்கவேண்டும், இல்லாவிட்டால் எல்லாவற்றையும் ஹரிஜன நல இலாகாவின் கீழ் நடக்கும் பள்ளிக்கூடங்களாக ஆக்க வேண்டும்.

ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் அந்தந்த தாலூகாவிலே இருக்கும் ஆசிரியர்களை அந்தந்த தாலூகாவிற்குள்ளேயே மாற்றவேண்டும். ஒரு ஜில்லாவை விட்டு இன்னெரு ஜில்லாவுக்கு கே.டி.க்களைக் கொண்டு போவது போல மாற்றுவதால் அவர்கள் படும்பாடு இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. " இங்கு வந்து சொல், அங்கு வந்து சொல் ", பிரசிடெண்டிடம் சொல், செக்ரடரியிடம் சொல் " என்று உயிரை வாங்கு கிருர்கள். கேட்டால், அப்படித்தான் போடுவோம் என்று சொல்கிருர்கள். ஆகவே, இந்த நிலே மிகுந்த கஷ்டமாக இருக்கிறது.

எங்கள் சூணம்பட்டு, தென்னுற்காடு ஜில்லாவின் பார்டரில், கடைசியில் இருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தைப் பார்த்தால், எல்லாம் அப்படியே ஒன்றுமே இல்லாத நிலேயிலே இருக்கிறது. அம்மாதிரி பள்ளிக்கூடங் கள் எல்லாம், குறிப்பாக ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்கள் எல்லாம் என்ன நிலேமையில் இருக்கின்றன, என்ன குறைகள் இருக்கின்றன என்பதை அவ்வப்போது கண்காணிப்பதற்கு தனியாக ஒரு அதிகாரி நியமித்து அடிக்கடி அவைகளுக்கு வேண்டிய ரிப்பேர் செய்யவேண்டும். டெண்டர் விட்டால்கூட யாரும் ரிபேர் செய்வதற்கு வரமாட்டேன் என்று சொல்கிருர்கள். வருஷம் மூன்று ஆகியும் அந்தப் பள்ளிக்கூடம் கட்டப்பட வில்லே. மழை காலத்தில் குழந்தைகள் கஷ்டப்படக்கூடிய நிலேமை இருக்கிறது.

தயவுசெய்து ஆசிரியர்கள் விஷயத்தில் தகுந்த சலுகை காண்பிக்க வேண்டும். அவர்கள் தங்குவதற்கு வீட்டு வசதி இல்லே. போலீஸ் கான்ஸ் டபிள்களுக்கு போலீஸ் ஸ்டேஷன் அருகாமையில் போலீஸ் லேன்கள் கட்டுவதுபோல், ஆசிரியர்களுக்கும் அந்தந்தக் கிராமங்களில் வீட்டு வசதி செய்து கொடுக்கவேண்டும். ஒரு கிராமத்திற்கு நல்ல ஆசிரியர் ஒருவரை நியமித்தாலும், வீட்டு வசதி இல்லாத காரணத்தால், திரும்பிபோய்விடு கிருர். இப்படிச் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இவைகளே யெல்லாம் சரிவர பார்த்து நிவர்த்தி பண்ணும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஜில்லா போர்டுகளிலே வேலே செய்யும் ஆசிரியர்களெல்லாம் 55 வயதிலேயே ஓய்வு பெற்று உட்கார்ந்துவிடலாம் என்று இருக்கிறது. மானேஜ்மென்ட் பள்ளிக்கூடத்தில் 60 வயது வரைக்கும் இருக்கலாம் என்று இருக்கிறது. ஒரே வித கஷ்டம் இருப்பதால், எல்லா ஆசிரியர் களும் 60 வயது வரையில் உத்தியோகத்தில் இருக்கலாம் என்று ஏற்பாடு செய்யவேண்டும். அப்படிச் செய்தால் கோலே ஊன்றிக்கொண்டு வந்தாவது பள்ளிக்கூடத்தில் எதாவது சொல்லிக்கொடுப்பார்கள். ஆகவே, 60 வயது வரையில் எல்லா ஆசிரியர்களும் வேலேசெய்யலாம் என்ற சட்டத்தை ஏற்படுத்திக் கொடுக்கும்படி ரொம்ப தாழ்மையாக கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஒரு விஷயத்தைச் சொல்லி என்னுடைய உரையை முடித்துக்கொள் கிறேன். அதாவது, நாமக்கல் கவிஞர் தீண்டாமையைப்பற்றி என்ன சொல்லியிருக்கிருர் என்ருல், " நால்வர் உரைத்த தேவாரத்தில் இல்லே நந்தன் குலம் தனே நிந்தனே சொல்ல " என்று சொல்லியிருக்கிருர். இந்த நிலேயில் ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களில் கூட இன்னும் ஜாதி

8th April 1958] [Sri P. S. Ellappan]

வித்தியாசம் இருக்கிறது. ஹரிஜனப் பிள்ளைகளோடு ரெட்டியார் பிள்ளைகளோ முதலியார் பிள்ளைகளோ விளையாடினால்கூட தவருக இருக்கிறது. ஒன்ருக விளையாட விடுவது இல்லை. பள்ளிக்கூடம் விட்டு வெளியே போகும் போதுகூட ரெட்டியார் பிள்ளைகளுக்கும் முதலியார் பிள்ளைகளுக்கும் ஒரு வழியும், ஹரிஜனப் பிள்ளைகளுக்கு இன்னொரு வழியும் என்ற நிலை இருக்கிறது. இதையெல்லாம் இங்கே சொல்வதற்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. எதிர் கட்சியிலிருந்து உண்மையை எடுத்துச்சொன்னாலும் நல்ல விதமாக ஏற்றுக்கொள்ளுவது இல்லை. ஆகவே, பள்ளிக்கூடங்களில் தீண்டாமை இருக்கும்படியான விஷயத்தை ரொம்ப முக்கியமாக, சிரத்தையோடு நிவர்த்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

DEPUTY SPEAKER : The House will now rise for lunch and meet again at 3-30 p.m. 1-31 p.m.

The House then adjourned.

(After lunch—3-30 p.m.)

(Mr. Speaker in the Chair.)

**Sri P. G. MANICKAM** : மதிப்பிற்குரிய கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தை ஆதரித்து நான் சில சங்கதிகள் சொல்ல விரும்புகிறேன். கோவை ஜில்லாவைப் பொறுத்த வரையில் கல்வி விஷயமாக போதுமான கவனம் செலுத்திக் கொண்டு வருகிருர்கள்.

**Mr. SPEAKER** : நான்கைந்து அங்கத்தினர்கள் இன்னமும் பேச வேண்டுமென்று விரும்புகிருர்கள். ஆகவே கனம் அங்கத்தினர்கள் ஐந்து நிமிஷங்கள் மட்டும் இனி தங்கள் கருத்துக்களைச் சொல்வதற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri P. G. MANICKAM** : கல்வி விஷயமாக பல கோடி ரூபாய்களை நாம் செலவிட்டுக் கொண்டிருந்தும் கூட அங்கங்கே காணப்படுகிற சில குறைபாடுகளை உடனடியாக நிவர்த்தி செய்ய வேண்டுமென்பதற்காக அவைகளைச் சொல்ல விரும்புகிறேன்.

ஆரம்பக் கல்வியை நாம் எடுத்துக் கொண்டால் 1949-53-ம் வருஷத்திலே ஒன்பது லட்சத்திற்கு மேற்பட்ட மாணவர்கள் முதல் வகுப்பில் சேர்ந்திருக்கிருர்கள். ஆனால் ஐந்தாவது வகுப்பு வரையில் அவர்களிடையே வந்திருப்பவர்கள் மூன்று லட்சம் சொச்சம் மாணவர்கள்தான். இவர்கள்தான் ஐந்தாம் வகுப்பில் தேர்ச்சி அடைந்திருக்கிருர்கள். இடையில் அதிகமான மாணவர்கள் நின்றுவிடுகிருர்கள். இதனால் கல்வியின் நிலைமை என்ன ஆகிறது என்பதை நாம் யோசிக்க வேண்டும். வாத்தியார்களுக்கு ஆகிற செலவு என்ன ? பள்ளிக்கூடக் கட்டிடம், இதர செலவுகள் எல்லாம் என்ன ? இப்படி ஏராளமான தொகை செலவு செய்யப்பட்டும்கூட முதல் வகுப்பில் சேருகிற மாணவர்கள் ஐந்தாம் வகுப்பு வரையில் படிக்காத ஒரு காரணத்தினால் ஆரம்பக் கல்வியின் தரமானது ஒருவிதத்தில் பாதிக்கப்பட்டுவிடுகிறது. மட்டமாகி விடுகிறது என்பதை நாம் எல்லோரும் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

பள்ளிக்கூடத்தில் படிக்கச் சேர்ந்த மாணவர்கள் இடையில் நின்றுவிடாது இருப்பதற்கு பிற்பகலில் உணவு கொடுக்கும் திட்டம் அமைந்திருக்கிறது. இதன் மூலம் ஏழை மாணவர்களுக்கு நன்மை ஏற்படுவதோடு சாப்பாட்டிற்காக அவர்களிடையில் படிப்பதை நிறுத்திவிடாமல் இருக்கலாம். ஆகவே இந்தத் திட்டம் நல்லமுறையில் நடைமுறையில் செயல்படுவதற்கு அதிகாரிகள் அதிக சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri P. G. Manickam] [8th April 1958

அதோடு அதிகாரிகள் ஆங்காங்கு பள்ளிக்கூடங்களைப் பார்வையிடச் செல்லும்போது குழந்தைகளுடைய பெற்றோர்களுடன் அதிகமாகப் பேச வேண்டும். குழந்தைகளின் படிப்பை இடையில் நிறுத்திவிடாமல் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கும்படியாக சொல்ல வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆத்துடன் எங்கள் ஜில்லா விஷயம் ஒன்றிரண்டைப் பற்றித் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். 1958-ம் வருஷம் மார்ச் மீ 3 உ என்னுடைய வாய்மொழிக் கேள்வி ஒன்றுக்கு கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும் போது பள்ளிக்குச் செல்லக்கூடிய குழந்தைகள் வயது 6 முதல் 11 வரையில் 450,955 பேர்கள் என்பதாகவும், இவர்களில் பள்ளியில் படிப்பவர்கள் மட்டும் 31,975 என்றுதான் என்பதாகவும், 11 வயது முதல் 14 வரையில் பள்ளிக்குச் செல்லக்கூடியவர்களின் தொகை 236,214 என்பதாகவும், இவர்களில் பள்ளியில் சேர்ந்து படிக்கக்கூடியவர்கள் 8,101 தான் என்றும் குறிப்பிட்டார்கள். அதாவது 6 வயது முதல் 11 வயது வரையில் பள்ளிக்கூடத்திற்குச் செல்லவேண்டியவர்கள் இன்னும் எங்கள் கோவை ஜில்லாவில் 418,980 பேர்கள் இருக்கிறார்கள் என்றால் நமது ராஜ்யத்தின் மொத்தத் தொகையில் மூன்றில் ஒரு பாகத்தினர் அந்த ஜில்லாவிலேயே இருக்கிறார்கள் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால் அந்த ஜில்லாவில் அதிகமான ஆரம்பப் பள்ளிகளை ஆரம்பித்து அதிகமான மாணவர்கள் உடனடியாகப் படிப்பதற்கு வேண்டிய வசதிகள் எல்லாவற்றையும் செய்து கொடுக்க வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். இன்னும் மூன்று நான்கு வருஷங்களுக்குள் வருஷத்திற்கு ஒரு லட்சம் மாணவர்கள் வரையிலாவது அதிகமாகப் பள்ளியில் சேர்க்கப்படுவதற்கு வேண்டிய வசதிகள் எல்லாவற்றையும் செய்யவேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். நேரம் இல்லாத காரணத்தினால் இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. VEDAMANICKAM:** தலைவர் அவர்களே, இவ்வாண்டு நமது நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டப்படி கல்வி இலாகாவிற்கு 12 கோடி 34 லட்சம் ரூபாய் மான்யம் கோரியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்கு முன்னால் சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தால் இரண்டு கோடி 62 லட்சம் ரூபாய்தான் கல்விக்காக செலவிடப்பட்டிருக்கிறது. கிட்டத்தட்ட இப்போது கல்விக்காகப் பத்து கோடி ரூபாய் வரையில் அதிகம் செலவிட்டு வருகிறோம். இது நாம் அந்த துறையில் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறோம் என்பதைக் காட்டும்.

இருந்தாலும் ஆரம்ப ஆசிரியர்களுடைய நிலைமை அல்லலுக்குரியதாகவே இருந்து கொண்டிருக்கிறது. வருங்காலப் பிரஜைகளை உற்பத்தி செய்யக்கூடிய ஆரம்ப ஆசிரியர்களுக்கு உற்சாகம் ஊட்டும் அளவில் அவர்களுடைய நிலைமையை உயர்த்தவேண்டும். குறிப்பாக இன்றைக்கு அவர்களுக்கு 30 ரூபாய் சம்பளமும், அலவன்சு 31 ரூபாயும் கொடுக்கப்படுகிறது என்று நினைக்கிறேன். இந்த அலவன்ஸ் ஒருக்கால் நிறுத்தப்பட்டுவிட்டால் அவர்களுக்குக் கொடுக்கப்படுகிற சம்பளம் அவர்களுடைய வாழ்க்கை நிலைக்குப் போதுமானதாக இராது. ஆகையால் அவர்களது சம்பளத்தை உயர்த்த தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அப்படி இல்லாவிட்டாலும் அவர்களுடைய அலவன்சில் ஒரு பகுதியை சம்பளத்தில் சேர்த்துவிடுவதற்கு சர்க்கார் முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு முக்கியமாக நாம் கவனிக்கவேண்டிய விஷயம் ஒவ்வொரு ஆசிரியருக்கும் எத்தனை பிள்ளைகள் இருக்கவேண்டும் என்று நிர்ணயிப்பது. இன்றைக்கு ஒரு ஆசிரியருக்கு நாற்பது மாணவர்கள் இருக்கவேண்டும் என நிர்ணயித்திருக்கிறார்கள். சிறு பிள்ளைகளை வீட்டில் வைத்துக்கொள்வது எவ்வளவு கஷ்டம் என்பது பெற்றோர்களுக்குத் தெரிந்திருக்கும். அதற்காகவே பள்ளிக்கூடத்திற்கு பெரும்பாலானவர்கள் தங்கள் குழந்தைகளை அனுப்பிவிட விரும்புகிறார்கள். ஒன்றிரண்டு குழந்தையை வைத்துக் கொள்வதே இத்தனை கஷ்டம் என்றால் ஒரு ஆசிரியர் வகுப்பில்

8th April 1958] [Sri P. Vedamanickam]

நாற்பது பிள்ளைகளை வைத்துக் கொள்வது எத்தனை கஷ்டமாக இருக்கு மென்று சொல்ல விரும்புகிறேன். படிப்பின் தரமும் அதிகமான மாண வர்கள் இருக்கும்போது மிகவும் குறைந்துவிடுகிறது. ஆகவே மாணவர் களின் தொகையைக் குறைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதாவது குறைந்தது 25 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்றுவது வைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடுகூட மிட் டே மீல்ஸ் ஏழை மாணவர்களுக்குப் பிற்பகலில் கொடுக்கப்படுகிறது. ஏறக்குறைய ஒரு மாணவனுக்கு 6 நயா பைசா செலவாகிறது. உண்மையில் சில கிராமங்களில் நல்ல முறையில் இந்தத் திட்டம் நடைபெறுகிறது. சில கிராமங்களில் முடியவில்லை. பல கிராமங் களில் இது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அங்கும் நல்ல முறையில் பிற்பகலில் உணவு கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் பத்து ஆண்டில் நம் நாட்டில் உள்ளவர்கள் எல்லாம் கல்வி அறிவு உடையவர்களாகச் செய்யவேண்டுமானால் கட்டாயக் கல்வியை அமுலுக்கு கொண்டு வரவேண்டும். கட்டாயக் கல்விமுறையை அமுலுக்கு கொண்டுவந்து பள்ளிக்கூடத்திற்கு வயது வந்த பிள்ளைகளை அனுப்பாதவர்களைத் தண்டிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அது இல்லாத காரணத்தினால் கட்டாயக் கல்வி சரிவர நடைபெறாமல் இருக்கிறது. எல்லா மாணவர்களும் நாட்டில் படிக்க வேண்டுமானால் கட்டாயக் கல்வி அவசியம் என்று வற்புறுத்துகிறேன்.

அடுத்தபடியாக செகண்டரி கிரேட் ஆசிரியருக்கு எந்தப் பள்ளியில் வேலை செய்தாலும் ஒரேவிதமான சம்பளம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒரு இடத்தில் வேலை செய்பவருக்கும், இன்னொரு இடத்தில் வேலை செய்பவருக்கும் வித்தியாசம் இருக்கக்கூடாது. அதோடு இன்னொரு விஷயம். ஆசிரியர்கள் அடிக்கடி ஒரு இடத்திலிருந்து இன் னொரு இடத்திற்கு மாற்றப்படுகிறார்கள். குறிப்பாக தென்னாற்காடு மாவட் டத்தில் சென்ற மூன்று ஆண்டில் அடிக்கடி இம்மாதிரியாக ஆசிரியர்கள் 3-40 p.m. மாற்றப்பட்டு வருகிறார்கள். இதனால் ஆசிரியர்களுக்கு மிகவும் கஷ்டம் ஏற்படுகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஒரு ஆசிரியர் கலப்பு மணம் செய்து கொண்டதற்காக அவர் ஒரு ஆண்டில் மூன்று முறை மாற்றப்பட்டார். இன்று அரசாங்கமும், இதர அரசியல் கட்சிகளும் கலப்பு மணத்தை ஆதரிக்கும்போது ஒரு ஹரிஜன ஆசிரியர் கலப்பு மணம் செய்து கொண்டதற்காக ஒரு ஆண்டி லேயே மூன்று தடவை மாற்றப்பட்டு அவர் மிகவும் அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, குறைந்தது மூன்று வருஷங்களுக்காவது ஒரு ஆசிரியரை ஒரேயிடத்தில் இருக்கும்படிச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களை தாலுகா விட்டு தாலுகா மாற்றினால் இன்னும் அல்லல். குறைந்த சம்பளத்தில் அவர்கள் இப்படி அடிக்கடி மாற்றப்பட்டால் எவ்வளவு தூரம் கஷ்டப்படுவார்கள் என்பதை நீங்கள் உணர்ந்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : சபாநாயகர் அவர்களே, இந்த கல்வி மான்யக் கோரிக்கைக்கு நம் வருமானத்தின் ஐந்தில் ஒரு பகுதி ஒதுக்குவதை விட நான்கில் ஒரு பகுதி ஒதுக்கப்பட்டால் அதை நான் முழு மனதுடன் வரவேற்கும் ஒரு நிலை ஏற்படும். நமது கல்வி அமைச்சர் அவர்கள் நிதியமைச்சராகவும் இருக்கும் காரணத்தினால்தான், மற்ற துறைகளுக்கும் பணம் ஒதுக்க வேண்டியிருப்பதால் தானே கல்விக் காக அதிகம் தொகை ஒதுக்கிக் கொண்டால் தன் இலாகாவிற்கே அதிகம் ஒதுக்கிக் கொண்டது மாதிரியாகும் என்று இது மிகவும் முக்கிய மான இலாகாவாக இருந்தபோதிலுங்கூட நமது வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்குதான் ஒதுக்கிக் கொண்டிருப்பது அவரது பெருந்தன்மையைத் தான் எடுத்துக் காட்டுகிறது. ஆக, கல்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை நான்கில் ஒரு பகுதியாக இருந்தால் அதை முழு மனதுடன் வரவேற்பேன் என்று சொன்னதற்குக் காரணம் என்னவென்றால்,

[Srimathi Kamalambuja Ammal] [8th April 1958

சமுதாயத்திலுள்ள கேடுகளை, ஒழுங்கீனங்களைப் போக்ககூடியதும், அறிவை உண்டாக்கக் கூடியதும் கல்வி ஒன்றுதான். நல்லதொரு, ஒழுக்கமுள்ள சமுதாயத்தை ஏற்படுத்த வேண்டுமென்றால் சமுதாயத்தில் உள்ள மக்கள் அனைவரும் கல்வி அறிவு பெற்றவர்களாக இருக்க வேண்டியது மிக மிக அவசியம். அப்படி நம் மக்களின் கல்வி அறிவைப் பெருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் நமது சர்க்கார், இப்பொழுது ஏறக்குறைய 500 ஜனத்தொகை உள்ள எல்லா சிறு சிறு கிராமங்களிலும் கூட, பக்கத்தில் பள்ளிக்கூடம் இல்லாவிட்டால் அங்கெல்லாம் ஓராசிரியர் பள்ளிகளாவது ஏற்படுத்தவேண்டுமென்ற திட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றுகிறார்கள். பள்ளிக்கூடங்கள் அதிகரித்துக்கொண்டு போகும்போது ஆசிரியர்களும் அதிகமாகத் தேவைப்படுகிறார்கள். ஆனால் ஆசிரியர்களின் பயிற்சிக்காக ஒதுக்கப்படும் ஸ்தானங்களைப் பார்க்கும்போது அது மிகக் குறைவாக யிருக்கிறது. ஆசிரியர்களின் தேவை அதிகப்படும்போது ஸ்தாபனங்களும் அதிகமாக ஒதுக்கப்படவேண்டும். ஆசிரியர்களுக்கு பயிற்சி கொடுக்கப்பட்டு எல்லாப் பள்ளிக்கூடங்களிலும், ட்ரெயினிங் பெற்ற ஆசிரியர்களை நியமிக்கவேண்டும். அடுத்தபடியாக, ஆசிரியர்களுக்கும் பிள்ளைகளுக்கும் உள்ள விகிதாச்சாரம், 40 பிள்ளைகளுக்கு ஒரு ஆசிரியர் என்று கல்வி வெள்ளை அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே ஒரு ஆசிரியர் 40 பிள்ளைகளை வைத்துக்கொண்டு பராமரிப்பது என்றால் அது மிகவும் கஷ்டமான காரியந்தான். சாதாரணமாக பிள்ளைகளை அடக்கி வைத்துக் கொண்டு அவர்கள் வீட்டிற்குப் போனாலே அதுவே பெரிய ஒரு காரியமாகும். உண்மையிலேயே, பிள்ளைகளுக்கு போதிய அளவு கல்வி அறிவு புகட்ட வேண்டுமென்றால் ஒரு ஆசிரியருக்கு 40 பிள்ளைகள் என்பது அதிகமாகும். ஆகவே, மாணவர்களின் தொகைக்கு ஈடு கட்டுவது போல் ஆசிரியர்கள் அமர்த்தப் பட்டால்தான் அவர்களால் மாணவர்களுக்கு உயர்தரமான கல்வி போதிக்க முடியும். தற்போதுள்ள நியதிப்படி 40 பிள்ளைகளுக்கு மேல் 60, 65 பிள்ளைகள் இருந்தால் கூட வேறு ஆசிரியர்கள் போட முடியாமல் இருக்கிறது. ஆகவே, 60 பிள்ளைகள் இருந்தால், குறைந்தபட்சம் இரண்டு ஆசிரியர்களாவது போடக்கூடிய ஒரு நிலையையாவது ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியம். எட்டாம் வகுப்பு படித்துவிட்டு ஹையர் கிரேட் ட்ரெயினிங் எடுக்கும்போது, எட்டாம் வகுப்பு வரை பாஸ் செய்து விட்டு ஹையர் கிரேட் ட்ரெயினிங்க்கு மனு செய்யும் மாணவ மாணவிகளின் நிலை மிகவும் பரிதாபகரமாக யிருக்கிறது. காரணம், 4, 5 பாரங்கள் பாஸ் செய்தவர்களும், 6-வது பாரம் தேர்ச்சி பெறாதவர்களும் அதற்கு மனு செய்கிறார்கள். அப்பொழுது செலக்ஷன் கமிட்டியில் என்ன செய்கிறார்கள் என்றால், எட்டாம் வகுப்புக்கு மேல் படித்தவர்களுக்கு முதல் சலுகை கொடுக்க வேண்டியிருக்கிறது. எட்டாவது பாரம் வரை படித்துவிட்டு, ஹையர் கிரேட் டிரெயினிங்கையே நம்பிக் கொண்டிருக்கும் மாணவ மாணவிகளின் நிலை மிகவும் பரிதாபத்திற்குரியதாக இருக்கிறது. அவர்கள் ஏமாற்றத்திற்கு ஆளாகிறார்கள். ஆகவே, எட்டாவது வகுப்பு வரை படித்து விட்டு ஹையர் கிரேட் ட்ரெயினிங்க்கு செல்லலாம் என்பதையே எடுத்து விட்டால் கூட நல்லது என்றுதான் நான் நினைக்கிறேன். ஆகவே, எட்டாவது வகுப்பு முடித்தவர்களுக்கு ஏதாவது ஒரு தொழிலைச் செய்ய வழி வகை வகுத்துக் கொடுத்தால் மிகவும் உபகாரமாயிருக்கும் (பெல்) நேரம் அதிகம் இல்லாததால் அதிகமாக விஸ்தரித்துப் பேச முடியவில்லை. ஆகவே, சில விஷயங்களை மாத்திரம் சொல்லிக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். ஒரு ஹைஸ்கூல் ஆரம்பிக்க வேண்டுமென்றால் கட்டிடத்திற்கு 50,000 ரூபாயும் அதற்கு மேல் மெயின்டனன்ஸுக்கு வேண்டிய தொகையும் வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது எட்டாம் வகுப்பு வரை உள்ள இடங்களில் வருடத்திற்கு ஒரு வகுப்பாவது உயர்த்திக் கொடுத்தால் நன்றாகயிருக்கும். ஐம்பதினாயிரம் ரூபாயையும் ஊராரே கொடுக்க கஷ்டப்படுகிறார்கள். ஆகவே சிலயிடங்களில் மாத்திரந்தான் உயர்நிலைப் பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டு உயர்தரப்படிப்பு கிடைக்க வசதியிருக்கிறது. மீதியிடங்களில் அப்படி உயர்நிலைப் பள்ளிகள் இல்லாததால் உயர்தரப் படிப்பு கிடைக்க வசதியில்லாது போய் விடுகிறது. மிட்டே மீல்ஸ் காரணமாக பள்ளிக்கூடங்களுக்கு அதிகம் பிள்ளைகள் வந்து சேருகிறார்கள்.

8th April 1958]

**Sri T. S. RAMASWAMY PILLAI :** சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து பல அங்கத்தினர்கள் பேசினார்கள். ஆசிரியர்களின் குறைகளையும், கல்வி இலாகாவில் சீர்படுத்தப்படவேண்டிய பல விஷயங்கள் குறித்தும் அன்பர்கள் எடுத்துக் கூறினார்கள். நம்முடைய கல்விக் கொள்கையைப் பொறுத்தளவில் ஆரம்பக் கல்விக்காக 12 கோடி ரூபாயில் ஏகதேசம் 6 கோடிக்கு அதிகமான ரூபாயை நாம் ஒதுக்கியிருக்கிறோம். அது, அத்தியாவசியமான ஒரு தொகையாகும். நம் நாட்டு மக்களின் எழுத்தறிவையும், கல்வியறிவையும் உயர்த்தினால் ஒழிய நம் ஜனநாயகமும், நம் தேசத்தின் முன்னேற்றமும் ஓங்கி வளர முடியாது. இந்த நிலையில் ஒரு பெரும் பகுதியை அதற்காக ஒதுக்கியிருப்பதை நாங்கள் வரவேற்கிறோம். ஆனால் அதே நேரத்தில் இவ்வளவு தொகை ஒதுக்கியபோதிலும் அந்தத் தொகை எவ்வளவு தூரம் பயன்படுகிறது என்று பார்த்தால் அந்தத் தொகை அளவிற்கு நாம் பயன் அடையவில்லை என்பதை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் வேறு எந்த ராஜ்யத்தையும் விட நம் ராஜ்யத்தில் தான் கல்வி அரசியலால் பாதிக்கப்பட்டிருக்கிறது. கல்விக் கொள்கையைப் பொறுத்தளவில், நம் சென்னை ராஜ்யத்தைப் போல் வேறு எந்த ராஜ்யத்திலும் கல்வி பாதிக்கப்படவில்லை என்று நான் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். உதாரணமாக, இந்தியை எடுத்துக்கொண்டாலும் சரி, அல்லது ஆரம்பக் கல்வி விஷயத்தில் எவ்வளவு அதிகமான குழந்தைகளுக்கு பயிற்சி கொடுக்க முடியும், குறுகிய காலத்தில் என்ற விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் சரி அண்டை நாடுகளை விட நம் நாடு தான் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. வேறு வெளி ராஜ்யங்களில் ஹிந்திக்கு எதிர்ப்பில்லை. கேரள ராஜ்யத்தில் இந்திக்கு எதிர்ப்பில்லை, அதேபோல் ஆந்திராவிலும் இந்திக்கு எதிர்ப்பில்லை. ஆனால் நம் ராஜ்யத்தில் இந்திக்கு எதிர்ப்பு இருக்கிறது. அதேபோல், ஆரம்பக் கல்வியைப் பொறுத்த வரையில் நம் ராஜ்யத்தில் ஒரு மாணவனுக்கு ஒரு வருஷத்திற்கு 24 ரூபாய் செலவாகிறது என்று சொல்லும்போது அது 30 ரூபாயாக உயர்ந்திருக்கிறது என்று கல்வியமைச்சர் அவர்களின் அறிக்கையில் காண்கிறேன். அதே நேரத்தில் அண்டை ராஜ்யத்தில் எட்டு ரூபாய்தான் ஆகிறது என்றால் நாம் செலவு செய்யும் 30 ரூபாய் அங்கு மூன்று பையன்களுக்கு செலவு செய்யும் தொகையை விட கூடுதலாகயிருக்கிறது. அதைப் பார்க்கும்போது நாம் ரூபாயை எவ்வளவு தூரம் துர்விநியோகம் செய்கிறோம் என்று பார்க்கவேண்டும். நம் அரசியல் சட்டம் 42-வது விதிப்படி 14 வயதுள்ள எல்லோருக்கும், எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூரம், இலவசமாகவும் கட்டாயமாகவும் கல்வி அறிவு கொடுக்கும் புனிதமான, மகத்தான கடமையை நாம் இன்றையதினம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். எத்தனையோ கமிட்டிகள் போட்டோம். 1953-ல் ஒரு கமிட்டி, 1955-ல் ஒரு கமிட்டி, அதன் பின்னால் வெள்ளை அறிக்கை ஒன்று, பின்னர் வெள்ளை அறிக்கையைப்பற்றி இரு சபைகளையும் சேர்ந்த நிபுணர்களின் அறிக்கை இவைகளெல்லாம் வந்துவிட்டன. 1950-ல் இருந்து நாம் 1960-ம் ஆண்டை எட்டிப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். இவ்வளவு வருடங்களாக நாம் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டிருக்கிறோமே தவிர முன்னேற்றம் ஒன்றும் காண்பதற்கில்லை. இப்பொழுது 27 லட்சம் மாணவர்கள் ஆரம்பப் பள்ளிகளில் இருப்பதாக புள்ளி விவரங்கள் கூறுகிறது. இதற்கு முன்னால் உள்ள புள்ளிவிவரங்களைப் பார்க்கும்போது, நிலைமை எப்படி இருக்கிறது என்றால், 10 லட்சம் மாணவர்கள் ஒன்றாவது வகுப்பில் சேர்ந்தால் ஐந்தாவது வகுப்பிற்கு வரும்போது அது 3 லட்சமாக குறைகிறது. பாக்கியுள்ளவர்கள் ஒன்றாவது, இரண்டாவது வகுப்புடன் நின்று விடுகிறார்கள். ஆகவே, அவர்களுக்கு செலவு செய்ததெல்லாம் வேஸ்ட்தானே. மேலும் அண்டை ராஜ்யங்களில் ஆசிரியர்களுடைய சம்பளமும் ஜாஸ்தியாக இருக்கிறது. இந்த நிலை மாத்திரம் இங்கு ஏன் என்று நாம் 5-30 p.m.
பார்க்கவேண்டும். இதில் அரசியல் அபிப்பிராயங்களை எல்லாம் அப்புறப்படுத்திவிட்டு இந்தப் பிரச்னையை எடுத்துப்பார்ப்போமானால் இந்த ஆறரைக் கோடி ரூபாயை செலவு செய்வதில் நாம் பல லட்சக்கணக்கான மாணவர்களை பயிற்றுவிக்க முடியும் என்பதை நாம் பார்க்கவேண்டும். அந்த முறையில் பார்க்கும்பொழுது என்னுடைய கொள்கை என்னவென்றால், என்னுடைய அரசியல் கட்சியின் கொள்கை என்று சொல்ல முடியாது. இதில் ஷிப்ட்

[Sri T. S. Ramaswamy Pillai] [8th April 1958

ஷிஸ்டம் ரொம்பவும் அத்தியாவசியமானது என்று சொல்லமுடியும். இதன் மூலம் லட்சோபலட்சம் பிள்ளைகளுக்கு கல்வி அளிக்க முடியும். இந்த ஷிஸ்டம் அண்டை ராஜ்யமான கேரள ராஜ்யத்தில் இருந்துகொண்டு வருகிறது. ஏன் நமது ராஜ்யத்தில் கூட கன்னியாகுமரி ஜில்லாவில் இந்த ஷிப்ட் ஷிஸ்டம் இப்போதும் நடந்துகொண்டு வருகிறது. இதன் மூலம் அதிகமான கல்வி அறிவு பெறச் செய்ய முடிகிறது. அந்த ஜில்லா கல்வி அறிவு அதிகமாக பெற்றிருக்கிறது என்று பெருமைபட்டுக் கொள்ள முடியும். இதல்லாமல் கல்வி விஷயத்தில் அரசியலை புகுத்துவது என்பது, அல்லது குலக் கல்வியை புகுத்துவது என்பது எல்லாம் பொதுக்கூட்டங்களுக்கும் சபைக்கும் தான் நல்லதாக இருக்கும். அண்டை ராஜ்யத்தில் 80 சத விகிதம் லிட்டரஸி இருக்கிறது என்று சொல்லும் பொழுது நமது ராஜ்யத்தில் 20 சத விகிதம் தான் இருக்கிறது என்று சொன்னுல் அதைப் பற்றி உண்மையிலேயே நாம் வருத்தப்படவேண்டி யிருக்கிறது. ஆகவே நாம் அதை புனராலோசனை செய்யவேண்டும். இதைப்பற்றி நம்முடைய லெஜிஸ்லேட்டிவ் கமிட்டியினுடைய ரிப்போர்ட்டில் தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. ஐந்து வருடம் கட்டாய கல்வி வேண்டும் என்று கூறியிருக்கிறுர்கள். இவ்விதம் இருக்கவேண்டும் என்று 1950-லேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல் அதை நடைமுறைக்கு கொண்டு வருவதில்தான் தாமதம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்த கட்டாயக் கல்வியை கொண்டு வரவேண்டும் என்று சொல்லும்பொழுது அதை ஏன் உடனே அமுல் நடத்தக்கூடாது என்று கேட்கிறேன். கன்னியா குமரி ஜில்லாவில் இந்த கட்டாய கல்வியினுல் எந்தவிதமான கஷ்டமும் ஏற்பட்டு விடவில்லை. ஐந்து வயதானஉடன் நிச்சயமாக பள்ளிக்கூடத் திற்கு அனுப்பிவிடுவார்கள். அதே போன்றுதான் பகல் உணவு விஷயத்தில் அங்கு 25 வருடங்களாக இந்த பகல் உணவு அளிக்கப்பட்டு வருகிறது. ஆகவே இதைப்பற்றி புனராலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றுல் வருங்கால இந்திய பிரஜைகளை நாம் உருவாக்கவேண்டியிருக்கிறது. இப்போது 27 லட்சம் மாணவர்கள் இருக் கிறுர்கள் என்று சொல்லப்பட்டது. இங்குள்ள என்ரோல்மெண்ட் விகிதத் தைப்பார்த்தால் செக்கண்டரி ஸ்கூலில் 90 பேர்கள்தான் இருக்கிறுர்கள். அங்கே 190 பேர்கள் இருக்கிறுர்கள். இவ்வளவு வித்தியாசம் இருக்கிறது. இதைப் போக்கடிப்பதற்கு எல்லோரையும் பள்ளிக்கூடத்திற்கு கொண்டு வரவேண்டும். நம்மால் 27 லட்சம் மாணவர்களுக்கும் கல்வி பயிற்று விக்க முடியும். அடுத்ததாக நம்முடைய கல்வியின் தரம் குறைந்து விட்டதாக சொல்லமுடியாது. நம்முடைய பைனன்ஸ் டிப்பார்ட்மெண்டில் ஒருவர், ஷிப்ட் ஷிஸ்டத்தில் படித்தவர், காம்பட்டிடீவ் எக்ஸாமினேஷனி லும், ஐ.ஏ.எஸ்., ஐ.ஆர்.எஸ். போன்ற பரீட்சைகளில் முத லாவதாக தேறியிருக்கிறுர். இவர் ஷிப்ட் ஷிஸ்டத்தில் படித்தவர்தான். ஆகவே கல்வியின் தரம் பாதிக்கப்பட்டிருப்பதாக சொல்ல முடியாது. இதை அரசியல் பிரச்னையாக நாம் பார்க்கமுடியாது. ஆகவே இந்த திட்டத்தை புனராலோசனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக ஆசிரியர்களைப் பற்றி பலர் இங்கு கூறினுர்கள். என்னைப் பொறுத்தவரையிலும் நான் சொல்லுவது என்னவென்றுல் அவர்களது சம்பளங்கள் பல தினுசுகளாக இருக்கிறது. இவ்விதம் இருந்தால் நிச்சய மாக ஆசிரியர்களிடையே மனக்கசப்பு இருக்கத்தான் செய்யும். உதாரண மாக அவர்களது சம்பளங்களை பார்க்கும்பொழுது கார்ப்பரேஷன் பள்ளிக் கூட ஆசிரியர்களுக்கு 35—60 என்றும் எய்டட் ஸ்கூல் ஆசிரியர்களுக்கு 30—35 என்றும் பஞ்சாயத்து ஸ்கூல் ஆசிரியர்களுக்கு 30 ரூபாய் என்றும் பலவிதமாக இருக்கிறது. இந்த நிலை இருக்கக்கூடாது. இவ்விதம் இருந் தால் அவர்களுக்கு வேலை செய்வதற்கு உற்சாகம் இருக்கமுடியாது. ஆகவே இவர்களது சம்பளம் ஒரே வகையில் இருப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக அண்ணுமலை நகர் கல்லூரியில் ஏற்பட்ட விஷயங்களைப்பற்றி இங்கு குறிப்பிடப்பட்டது. சம்பவம் நடந்த மறு நாள் அதாவது 30-ம் தேதி 6–30 மணிக்கு அடி யேனும் அங்கு இருந்தேன். இந்த சம்பவத்தைப் பொறுத்த அளவில், அன்று ஏற்பட்ட சம்பவத்தைப் பொறுத்த அளவில் இந்த சம்பவத்திற் கும் அரசியலுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்று என்னுல்

8th April 1958] [Sri T. S. Ramaswamy Pillai]

திடமாக சொல்ல முடியும். ஆகவே இந்த சம்பவத்தோடு அரசியலை சேர்த்து பார்ப்பது நமக்கும் நல்லதல்ல, மாணவர்களுக்கும் நன்மையல்ல, அந்த யூனிவர்ஸிட்டிக்கும் நல்லதல்ல என்பதை தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். அங்கே இரண்டு ஆண்டுகளாக ஹாஸ்டல் தினம் நடத்தவில்லை. வேண்டாம் என்று வைத்துவிட்டார்கள். அதன்பின் இந்த ஆண்டில் பெண்கள் ஹாஸ்டலில் மாத்திரம் நடத்தினார்கள். இதற்கிடையில் ஹாஸ்டலைப்பற்றி அடிக்கடி புகார் இருந்து கொண்டிருந்தது. அங்கு என்.ஸி.ஸி. ஆபீஸர்களுக்கு சாப்பாடு போட்டதற்காக ஏற்பட்ட 5,000 ரூபாய் செலவையும் மாணவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று சொன்னார்களாம். இதைப்பற்றி முன்பே புகார்கள் இருந்து கொண்டிருக்கிறது. அதே மாதிரித்தான் ஹாஸ்டல் வார்டனைப்பற்றியும் பல புகார்கள் இருந்து கொண்டிருக்கிறது. முன்னால் அவரை நீக்கிவிட்டு பின்னாலும் அவரையே நியமித்தார்களாம். இம்மாதிரி நிர்வாகத்தில் பல ஊழல்களும் இருக்கிறது என்று சொல்கிறார்கள். நிர்வாகத்தின் வைஸ்-சான்ஸிலர் போட்ட உத்தரவை யாரும் கேட்கமாட்டார்கள் என்ற பேச்சுகூட அங்கு இருக்கிறது. இத்தகைய நிலையில் அன்றைய தினம் பெண்கள் விடுதியில் நடந்த ஹாஸ்டல் தினத்திற்கு 200-க்கு மேற்பட்ட மாணவர்கள் சென்றிருக்கிறார்கள். அமைச்சர் அவர்களும் அங்கு சென்றிருக்கிறார்கள். அவர்கள் அங்கு ஒழுங்காகவும் அமைதியாகவும் நடந்து கொண்டார்கள் என்று அமைச்சர் அவர்களே இங்கு ஒத்துக்கொண்டார்கள். இவ்விதம் அங்கு நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கிறார்கள். பின் இரவு 12 மணிக்கு சென்றிருக்கிறார்கள். சாதாரணமாக இரவு 10 மணிக்கு பின்னால் போனால் வாட்ச்மேன் அனுமதியில்லாமல் யாரையும் விடுவதில்லை. சாதாரணமாக ரெஸிடன்ஸியல் யூனிவர்ஸிட்டி எவ்வளவோ இருக்கின்றன. தென் இந்தியாவில் கண்போன்று நமக்கு ஒரே ஒரு ரெஸிடன்ஸியல் யூனிவர்ஸிட்டி இது ஒன்றுதான் இருக்கிறது. வட இந்தியாவில் பனாரீஸ் யூனிவர்ஸிட்டி இருக்கிறது, லட்சுமணபுரி யூனிவர்ஸிட்டி இருக்கிறது. இருந்தாலும் மிகச் சிறப்புடன் விளங்குகிற இந்த அண்ணாமலை யூனிவர்ஸிட்டியை கண்ணும் கருத்துமாக பார்க்கவேண்டியது நம்முடைய கடமை. அதை ஸ்தாபித்த ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கு நாம் நன்றி செலுத்தவேண்டும். இந்த யூனிவர்ஸிட்டியை பாதுகாக்கவேண்டியது நம்முடைய எல்லோருடைய கடமையாகும். இவ்விதம் அவர்கள் அங்கு வந்து கொண்டிருக்கின்ற நேரத்தில் அவர்களில் சிலரிடத்தில் அனுமதி இல்லாத காரணத்தால் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. இதற்கு முன்னாலும் பல தடவை வெளியில் ரோடுகளில் படுத்துவிட்டு அடுத்த நாள் போகவேண்டிய நிலைமை அங்கு மாணவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அன்றைய தினம் 250 மாணவர்கள் வந்திருக்கிறார்கள். வாட்ச்மேன் அனுமதிக்கவில்லை, உடனே வார்டன் அவர்கள் வீட்டுக்கு சென்றிருக்கிறார்கள். அங்கு அவர்கள் இல்லை என்று அறிந்த பிறகு அவர்கள் வைஸ்-சான்ஸிலர் இருக்கும் இடத்திற்கு போவதை தவிர வேறு எங்கே போவார்கள். ஒன்று வெளியே படுக்கவேண்டும் அல்லது வைஸ்-சான்ஸிலர் அனுமதியுடன் உள்ளே போகவேண்டும். இந்த நிலைமையில் மாணவர்கள் வைஸ்-சான்ஸ்ஸிலர் இருக்கும் விடுதிக்குச் சென்றிருக்கிறார்கள். அன்றையதினம் கனம் அமைச்சர் அவர்களும் வைஸ்-சான்ஸிலர் அவர்களுடைய விடுதியில் இருந்தார்கள். இவ்விதம் மாணவர்கள் வந்ததும் அமைச்சர் அவர்கள் வந்து பார்க்கவில்லை. வைஸ்-சான்ஸிலர் வந்து பார்த்திருக்கிறார். நான் வேண்டுமானால் திருச்சிக்கு போய்விடுகிறேன், ராஜிநாமா செய்துவிடுகிறேன், நான் சொன்னால் ரெஜிஸ்ட்ரார் கேட்க மாட்டார், நான் சொன்னால் வார்டன் கேட்கமாட்டார், நான் என்ன செய்ய முடியும் என்று கேட்டிருக்கிறார். வேறு வழியில்லாமல் மறுநாள் காலையில் வரும்படி சொன்னார்களாம். பின்னால் மாணவர்கள் வேறு வழியின்றி மீண்டும் வார்டன் வீட்டுக்கு மீண்டும் ஒரு முறை சென்றிருக்கிறார்கள்.

MR. SPEAKER: The hon. Member must remember that it is now 4 o'clock. 4 p.m.

SRI T. S. RAMASWAMY PILLAI: அவர்கள் பார்க்க செல்லும் பொழுது வார்டன் வீட்டில் இல்லையாம். நிலைமை தடுமாறிவிட்டது.

ஆகவே மாணவர்கள் கல்லை எடுத்து எறிந்தார்கள். வார்டனுடைய மனைவி "நான் என்ன தவறு செய்தேன்" என்று கேட்டார்களாம். உடனே அவர்கள் திரும்பிஞர்களாம். "தன் கையே தனக்கு உதவி" என்பது போல, ஹாஸ்டலிலே கண்டதையெல்லாம் உடைத்துச் சென்றுர்கள் என்று எனக்கு 30-ம் தேதி மாலை 6-மணிக்குத் தகவல் கிடைத்தது. 6-மணிக்குப் போகும்பொழுது துணை வேந்தருடைய விடுதிக்கு முன்னல் ரோட்டிலே 2,000 அல்லது 3,000 மாணவர்கள் நின்றுர்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** 600 மாணவர்கள்தான் இருக்கும்.

**Sri T. S. RAMASWAMY PILLAI :** எதற்காக நிற்கிறீர்கள் என்று கேட்டேன். நாங்கள் துணை வேந்தரிடம் முறையிடச் செல்லுகிறேம் என்று சொன்னுர்கள். துணை வேந்தரிடம் முறையிட நீங்கள் அத்தனைபேரும் எதற்காகச் செல்லவேண்டும், உங்கள் பிரதிநிதிகளை அனுப்பிஞல் போதாதா என்று கேட்டேன். "பிரதிநிதிகள் போயிருக்கிறுர்கள், அவர்கள் வருகைக்காக காத்திருக்கிறேம்" என்று சொன்னுர்கள். "அமைச்சர் அவர்களிடத்தில் சொல்லலாமே" என்று சொன்னேன். நாங்கள் போட்ட கூட்டத்திலேகூட பேசமுடியாது என்று சொல்லிவிட்டு சென்னைக்கு போய் விட்டார்கள் என்று சொன்னுர்கள்.

இந்த சமயத்தில் கனம் சபாநாயகர் மணியை அடித்து, ஸ்ரீ வி. கே. ராமசுவாமி முதலியாரை கூப்பிட்டார்கள்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** கனம் சபாநாயகர் அவர்களே, தமிழ் நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் கூட்டணியின் சார்பாக இங்கேயுள்ள எல்லாக்கட்சிகளுக்கும் ஒரு விண்ணப்பத்தை சமர்ப்பித்திருக்கிறுர்கள். எல்லாக் கட்சிகளின் சார்பாகவும், எதிர் கட்சித் தலைவர் என்ற முறையிலும் அந்த விண்ணப்பத்தை தங்களுக்கு சமர்ப்பிக்கிறேன். ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** அசெம்பிளி விதி 217-வது விதியின் படி விண்ணப்பம் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் நிராகரிக்கப்படுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பட்ஜெட் விவாதத்திலேயே மிகவும் முக்கியமான மான்யக் கோரிக்கை கல்வி மான்யக் கோரிக்கையாகும். இன்னெரு விதத்திலும்கூட இது முக்கியமானதாகும். இந்தக் கோரிக்கையை விவாதிக்கிற நேரத்தில், இதிலே சம்பந்தப்பட்ட ஆசிரியர்கள் "ஏதோ தங்களுக்குக் கிடைக்கும்" என்று எதிர்பார்த்து ஆவலோடு ராஜ்யம் பூராவும் நம்பிக்கையோடு இருந்துகொண்டிருக்கிறுர்கள். பலர் அவர்களுடைய ஸ்தாபனங்களின் சார்பில் சென்னை வரையிலும் நடந்தும், சைக்கிளிலும், இன்னும் பல முறையிலும் வந்து, இங்கேயுள்ள பல கட்சிகளைச் சேர்ந்த சட்டசபை அங்கத்தினர்களையும், மற்றவர்களையும் கண்டு, தங்களுடைய குறைகளைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறுர்கள். இதிலே என் போன்றவர்களால் எந்த விதமான அரசியலையும் பார்க்க முடியாது. ஏதோ கஷ்டப்படுகிறவர்கள் ஆறுதலைத் தேடி வருகிறுர்கள். இதிலே அரசியல் காரணம் காண்பதை விட்டுவிட்டு, அவர்கள் சொல்லுவதிலே என்ன நியாயம் இருக்கிறது, எவ்வளவோ கஷ்டத்தை மேற்கொண்டு அவர்கள் நம்முடைய கல்விக்காக சேவை செய்து வருகிறுர்களே, அவர்கள் மனமுடையாதபடி நல்ல வார்த்தைகளையாவது சொல்லி உற்சாகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அரசியல் சண்டையை எல்லாம் நமக்குள்ளேயே, அரசியல் தலைவர்களுக்குள்ளேயும், கட்சிக்குள்ளேயும், மந்திரிகளோடும் வைத்துக்கொள்ளலாம். ஆசிரியர்களையும், ஊழியர்களையும், அரசியல் தகராறுக்கு இழுக்கவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். கோரிக்கைகளில் முக்கியமானது அடிப்படைச் சம்பளத்தை உயர்த்தவேண்டுமென்பது. அது சம்பந்தப்பட்ட மட்டில் அமைச்சர் அவர்கள் இந்த மான்யக் கோரிக்கையில் என்ன உறுதி அளிக்கப்போகிறுர்கள் என்பதைப்பற்றி நான் அதிகமாக எதிர்

பார்க்கவில்லை. வழக்கமாக கூறக்கூடிய பதில் தான் இதிலும் இருக்கும். ஆனால் மற்ற சௌகரியங்களையாவது கவனிக்கவேண்டும். ஆசிரியர்களின் சம்பளத்தை உயர்த்தும் பிரச்னை வேறு, மற்ற இலாகாக்களில் வேலை பார்ப்பவர்களின் சம்பளத்தை உயர்த்தும் பிரச்னை வேறு. இதை தனித் தனியாக கவனிக்கவேண்டும். ஆசிரியர்களுக்கு சம்பள உயர்வு கொடுத் தால் மற்றவர்களும் சம்பளம் கோருவார்களேயென்று பிரச்னையை ஒத்திப் போடக்கூடாது என்று வலியுறுத்துவதோடுகூட ஒரு கிரேடில் இருக்கக் கூடியவர்களுக்கு பல விகிதாசாரங்கள் இருப்பதை அகற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். செகண்டரி கிரேடு டிரெயினட் உபாத்தியாயர்களுக்கு, ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்கிறவர்களுக்கு அந்த கிரேடு கொடுக்கப் படவில்லை என்று குறை கூறுகிறார்கள். இந்தக் குறையைத் தீர்ப்பதற்கு உத்தரவு போடுவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். என்ன விவரம் என்று அறிய விரும்புகிறேன். ஹையர் எலிமெண்டரி கிரேடு உபாத்தியா யர்களுக்கு பஞ்சாயத்து போர்டிலுள்ளவர்களுக்கு ஒரு சம்பளம், கார்ப்பொ ரேஷனில் வேலை பார்க்கிறவர்களுக்கு ஒரு சம்பளம், முனிசிபாலிட்டியில் வேலை பார்க்கிறவர்களுக்கு ஒரு சம்பளம் என்று சம்பள விகிதம் இருக் கிறது. ஒரு கிரேடுக்கு ஒரு சம்பள விகிதம் ராஜ்யம் பூராவும் இருக்க வேண்டும். அந்தந்தப் பிரதேசத்திற்குத் தகுந்தவாறு தனி அலவன்ஸ் கொடுக்கலாம். ஒரு கிரேடு சம்பந்தப்பட்ட மட்டில் ஒரே சம்பளம் இருக்க வேண்டுமென்ற கொள்கையை அமல் நடத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த ஆசிரியர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் தனி நபர்கள் நிர் வகிக்கக்கூடிய பள்ளிகளில் உள்ள ஆசிரியர்களுக்கு ஒழுங்காக போய்ச் சேரவில்லை என்ற புகார் இருந்துகொண்டு இருக்கிறது. ராஜ்யப் பிரி வினைக்கு முன்னர் ஒரு ஜில்லாவில் பரீட்சார்த்தமாக நேரிடையாக ஆசிரியர் களுக்கே சம்பளத்தைக் கொடுக்கலாம், அதற்கு ஏற்பாடு செய்யலாமென்று நடைபெற்று வந்தது. முடிவு என்ன என்பது தெரிவதற்குள்ளாக ராஜ்யப் பிரிவினை ஏற்பட்டது. மலபார் கேரளாவோடு சேர்ந்துவிட்டது. இப்பொழுது நம்முடைய ராஜ்யத்தில் இந்தப் பிரச்னை இருந்துகொண்டிருக்கிறது. சில ஆசிரியர்கள் சொல்லுகிற புகார் என்னவென்றால், பத்து ரூபாய்க்கு மேல்கூட பிடித்துக்கொண்டு தான் சம்பளம் கொடுக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். இப்பேர்ப்பட்டவர்களிடம் பள்ளிக்கூடங்களை விட்டுவைப்பது தவறு என்பது என்னுடைய அபிப்பிராயம். கொடுக்கும் சம்பளமானது நேரடியாக ஆசிரியர்களுக்குப் போய்ச் சேருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஒவ்வொரு ஆசிரியருக்கும் எத்தனை குழந்தைகள் இருக்கலாம் என்பது சம்பந்தமான சர்ச்சை இன்னும் தீர்ந்தபாடில்லை என்று நினைக்கிறேன். ஒரு ஆசிரியருக்கு 35 குழந்தைகள் இருக்கலாம்...... (சிரிப்பு)

**Sri P. G. KARUTHIRUMAN :** ஒரு ஆசிரியருக்கா 35 குழந்தைகள் : (பலத்த சிரிப்பு).

**The Hon. Sri C. SUBRAMANIAM :** மாணவர்கள் என்று சொல்லுங்கள்.

**Sri M. KALYANASUNDARAM :** ஆரம்ப ஆசிரியர்களிடம் படிக்கக்கூடியவர்கள் குழந்தைகள்தான். நான் ஆச்சரியப்பட மாட்டேன். உங்களுக்கு சக்தி இல்லை, ஆதலால் குடும்பக் கட்டுப்பாடு வேண்டுமென்று சொல்லுகிறீர்கள். குழந்தைகள் ஜாஸ்தி பெறுவதைப் பற்றி ஆச்சரியப்படவேண்டியதில்லை. குழந்தைகள் என்றால் அந்த ஒரு அர்த்தத்திலே மட்டும் பார்க்கவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். கருத்திருமன் அவர்களுக்கு வேண்டுமானால் அந்த சந்தேகம் இருக்கும். ஒரு ஆசிரியருக்கு 35 மாணவர்களுக்கு மேல் இருக்கக்கூடாது. அளவைப் பற்றிக்கூட சந்தேகம் இருக்கிறது. 35-க்கு மேல் 69 வரையிலும் ஒரே ஆசிரியர் சொல்லிக்கொடுக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமோ என்ற கவலை இருக்கிறது. 35-க்கு மேற்பட்டுவிட்டால் 36 ஆக இருந்தாலும்கூட இரண்டு

[Sri M. Kalyanasundaram] [8th April 1958

ஆசிரியர்கள் இருக்கவேண்டும். 70 ஆக இருந்தால் மூன்றுவது ஆசிரியர் நியமிக்கும் முறை இருக்குமானுல், ஆசிரியர்களின் வேலைப்பளு குறையும், அவர்களுக்கு உற்சாகமும் ஏற்படுமென்று நினைக்கிறேன். அதிகப்படியான சம்பளத்தைக் கொடுத்துத்தான் அவர்களை இன்னும் உற்சாகப்படுத்த முடியு மென்றுலும், வேலைப்பளுவைக் குறைத்து அவர்களை உற்சாகப்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, அண்ணுமலை ஸர்வகலாசாலை நிகழ்ச்சிகளைப்பற்றி பேசு வதற்கு முன்னர், மாணவர்களிடத்தில் அரசியல் கட்சிகள் எப்படியிருக்க வேண்டுமென்பதைப்பற்றி அமைச்சர் அவர்கள் அடிக்கடி வெளியிலேயும் பேசி வருகிறுர்கள், சட்ட சபையிலும் குறிப்பிட்டிருக்கிறுர்கள். ஒரு விஷ யத்தை வரவேற்கிறேன். இதற்காக ஒரு ஆலோசனைக் குழுவை நியமித்து, அந்தக் குழுவில் இந்தப் பிரச்னைகளையெல்லாம் கலந்து ஆலோசிக்கலா மென்று அமைச்சர் அவர்கள் எடுத்திருக்கக்கூடிய முடிவானது வரவேற்கத் தக்கது. அதிலே என் கட்சியின் சார்பில் எந்த அளவுக்கு ஒத்துழைப்பைக் கொடுக்கமுடியுமோ அதை நாங்கள் கொடுக்கத் தயாராயிருக்கிறோம். கல்வியின் தரத்தை உயர்த்துவது நமது பிரதான குறிக்கோளாக இருக்க வேண்டும். மாணவர்களின் குறிக்கோளும் கல்விதான். ஆகவே என் கட்சியின் சார்பில் ஒத்துழைப்பைக் கொடுக்க முடியுமென்பதை அறிவித்துக்கொண்டு, இன்னும் மற்ற பிரச்னைகளையும் அமைச்சர் அவர்கள் விருப்பு வெறுப்பு இல்லாமல் ஆலோசிக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள் கிறேன். கல்வியின் தரம் உயரவேண்டுமானுல், மாணவர்களிடத்தில் வெறும் கட்சி அரசியல் இருக்கக்கூடாது என்பதை நான் ஓரளவுக்கு ஒப்புக் கொள்ள முடியும். எந்தக் கட்சியாக இருந்தாலும் சரி, கட்சி அரசியல் இருக்கக் கூடாது. அவர்கள் கல்வி அறிவு பெறவேண்டும். நல்லறிவு பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு கல்வி கற்கவேண்டும் என்பது அரசியல் கட்சிகளின் குறிக்கோளாக இருக்கவேண்டும். அரசியல் கட்சி களுக்கு இதற்கு அப்பாற்பட்ட குறிக்கோள் இருக்குமென்று நான் நினைக்க வில்லை. ஆளும் கட்சியாக இருந்தாலும் சரி, எதிர்க்கட்சியாக இருந் தாலும் சரி—எதிர்க்கட்சி ஆளும் கட்சியாக மாறலாம், ஆளும் கட்சி எதிர் கட்சியாக முடியும்—யார் அதிகாரத்தில் இருந்தபோதிலும், இந்த நாட்டை பரிபாலித்து, இந்த நாட்டின் பிரச்னைகளைக் கவனிப்பது, நம்முடைய ஆற்றல் மிகுந்த ஊழியர்களால்தான் முடியுமே தவிர, அரசியல் வாதிகள் மட்டும் ஆண்டு விடுவதாக நினைக்க முடியாது. நம்முடைய மாணவர்கள் நல்ல முறையில் கல்வி கற்கவேண்டுமென்ற குறிக்கோளோடு கல்லூரியில் படிக்க வேண்டுமென்பதில் அபிப்பிராய பேதம் இருக்கக்கூடாது. அவர்கள் தான் பிற்காலத்தில் பெரிய பெரிய விஞ்ஞானிகளாகவும் பெரிய பெரிய என்ஜினியர்களாகவும் தோன்றவேண்டும். மாணவர் களிலிருந்து தான் பெரிய பெரிய அறிஞர்கள் தோன்றவேண்டும்.. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள். அதில் சிலர் அமைச்சர்களாக இருந்தாலும் கூட அவர்களும் ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களே. ஆகையால் மாணவர்களிடத்தில் சென்று அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்கள் கல்லூரிகள் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்று நாம் சொல்லும் போது, ஜாக்கிரதையாக உணர்ந்து தான் பேசவேண்டும். எல்லோருக்கும் சம சந்தர்ப்பம் இல்லாத ஒரு சூழ் நிலையில்தான் பொறுமையும் துவேஷமும் 4-10 p.m. ஏற்படுகின்றன. சில கட்சிகள் கல்லூரி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளில் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்று கல்லூரி அதிகாரிகள் மாணவர் களுக்கு உத்தரவு போடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மாணவர்கள் " வாக்குவமில் " இல்லை. கல்லூரி அதிகாரிகள் உத்திரவு போட்டு ஒன்றும் தடுத்து விடமுடியாது. வெளியில் இருப்பவர்கள் இங்கு நடப் பதைப் பற்றி தெரிந்துகொள்வது இயல்பு.

பெரியவர்கள், கட்சித் தலைவர்கள் அவர்களை அணுகி பேசி, எந்த மாதிரி கட்டுப்பாடுவேண்டும் என்று ஒரு நல்ல முடிவு எடுத்தால், அப் பொழுது மாணவர்களைக் காப்பாற்றமுடியும். கட்சிகளின் மேல் **உள்ள**